# அன்றும் இன்றும் சிலருக்கு
# அதே இளந்தளிர் மேனி!




பியர்ஸ்— அசல் கிளிசரின் சோப்

கனிவான பியர்ஸ் சோப்பினால் காத்திடுவீர்
உங்கள் மேனி மெருகை. மாணிக்கப் படிகம்போல்
மிளிரும் ஒவ்வொரு வில்லையிலும் ஒரு நூறாண்டு
கால சோப்-உற்பத்தி அனுபவம் உள்ளிறங்கியுள்ளது.
பிஞ்சு மென்மை கொஞ்சும் பியர்ஸ்—தூய்மைக்
கொழுந்து—கண்கூடாக நீங்கள் ஊடுருவிப்
பார்க்கக்கூடிய உன்னதத் தூய்மை.

**பியர்ஸ் சருமக் களை...**
**கன்னிப் பருவக் களை**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்-PS. 56-140 TM

# எச்எம்வி அளிக்கும்

# தெய்வீகத் தன்மையின் தத்துவம்

## சுவாமி ரங்கநாதானந்தவின் ஆங்கில விரிவுரை

**5 இசைத்தட்டுகள் அடங்கிய ஒரு பெட்டி**




மத உபதேசத்திற்கும் புத்தகங்களுக்கும் தனிப் புகழ் பெற்ற சுவாமி ரங்கநாதானந்த உலகிற்கு அளிக்கும் ஒரு புதிய இனிய விரிவுரையாடல்.

எச் எம்வியின் இப்பெட்டியில் உள்ள இந்த இசைத்தட்டுகள்:

* உபநிஷத்தின் மந்திரமும் மகிமையும்.
* பகவத்கீதையின் முழு விரிவுரையாக்கம்.
* இந்தியக் கலாச்சாரத்தின் மகிமை.
* ஸ்ரீ ஸ்ரீ ராமகிருஷ்ணரவின் சொற்பொழிவுகள்.
* தெய்வத்தாய் ஸ்ரீ ஸ்ரீ சாரதா தேவியும் சுவாமி விவேகானந்தாவின் உபதேசமும்.

 ஒலி மயமான எதிர்காலம்



**தி கிராமஃபோன் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்**

GC 8906

VSK.LMC.BAL.779 TM





# இனிய கனவுகள்-
# பருவத்தின் கனவுகள்!
# நனவாக்குவது...

## லக்ஷ்மியின்
# பாலரீனு
## வாயில் புடவைகள்

அன்றாடம் உடுப்பதற்கும் எல்லா விசேஷ
சந்தர்ப்பங்களுக்கும் உகந்த துணி.
கவர்ச்சியான அணி. இலேசானது சுருங்காதது.
கோர்த்தி மிக்க டிசைன்கள். பாலரீனு வாயில்கள்
மேம்பட்டது. 90s & 100s உயர்தர
பருத்தியினால் நெய்யப்பட்டவை.

**தி லக்ஷ்மி மில்ஸ் கம்பெனி லிமிடெட் கோயம்புத்தூர்**

உயர்ந்த துணிகளின்
உன்னத சின்னம்

சுலபம்!
விளையாட்டு
நுழைவுக்
கட்டணம்
இல்லை!

# பரிசு பெறுங்கள்

ரூ 5000 மதிப்புள்ள
பொருட்களை!




## மகத்தான
## கேரளா சந்தன சோப்
## போட்டியில் கலந்து கொள்ளுங்கள்

| | | |
|---|---|---|
| முதற் பரிசு | கோத்ரேஜ் ஸ்டீல் பீரோ & எச். எம். டி. ஆட்டோமாடிக் கை கடிகாரம் |  |
| இரண்டாவது பரிசு | காஸெட் பிளேயர் |  |
| மூன்றாவது பரிசு | ஸ்போர்ட்ஸ் சைகிள் |  |
| 2 நான்காவது பரிசுகள் | 2-பாண்ட் ரேடியோ |  |
| 10 ஐந்தாவது பரிசுகள் | வாக்குவம் பிளாஸ்க்குகள் |  |
| 20 ஸ்பெஷல் பரிசுகள் | கேரளா சாண்டல் சோப் எக்ஸ்போர்ட் பாக் |  |
| 50 ஆறுதல் பரிசுகள் | கேரளா சாண்டல் சோப் (6 மீடியம் கட்டிகள்) |  |

போட்டியின் நிபந்தனைகள்
1. இந்தியக் குடிமக்கள் அனைவரும் இப்போட்டியில் கலந்துகொள்ளலாம்.
2. எவ்வளவு நுழைவுத் தாள்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம். ஆனால் ஒவ்வொரு நுழைவுத் தாளுடன் இரண்டு மீடியம் சைஸ் கேரளா சந்தன சோப் மேலுறைகளை அனுப்ப வேண்டும்.
3. கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிட்டெட்டின் ஊழியர்கள், அவர்களது உறவினர்கள் மற்றும் விளம்பர ஆலோசகர்களும் இந்தப் போட்டியில் கலந்துகொள்ள தகுதியற்றவர்களாவர்கள்.
4. நீதிபதிகளின் முடிவே சரியானதும் ஏற்றுக் கொள்ளக்கூடியதுமாகும். இதன் தொடர்பாக எந்தவித கடிதத் தொடர்பும் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.
5. முடிவு தேதி 15 செப்டம்பர், 1976
6. போட்டியின் முடிவு முக்கிய தினசரிப் பத்திரிகைகளில் வெளியிடப்படும்.

**முடிவு தேதி 15 செப்டம்பர் 1976**
விரைவில் உங்கள் நுழைவுத் தாளை அனுப்புங்கள்.

நீங்கள் செய்யவேண்டியவைகள் இதோ!
இந்த கேள்விகளுக்கு பதில் அளித்தால் போதும்.

1. எத்தனை தடவைகள் "கேரளா" என்ற வார்த்தை கேரளா சாண்டல் சோப் காகித உறையில் காணப்படுகிறது?
2. கேரளா சாண்டல் சோப் எங்கு தயாரிக்கப்படுகிறது?
3. கேரளா சாண்டல் சோப்பின் கூடுதல் குளிர்ச்சிக்குக் காரணம் அதில் ______________ அடங்கியிருக்கிறது.
4. கேரளா சாண்டல் சோப்பில் அடங்கியுள்ளது சைவ/அசைவ எண்ணெ. (தவறான விடையை அடித்துவிடவும்)
5. கேரளா சாண்டல் சோப்பை தயாரிப்பது ஒரு பொதுத்துறை/தனியார் துறை நிறுவனம் (தவறான விடையை அடித்துவிடவும்)
6. கீழ்க்கண்ட வாக்கியத்தை 10 வார்த்தைகளுக்குள், கீழ்க்கண்ட ஏதாவது ஒரு மொழியில், மொழி பெயர்க்கவும். தமிழ்/ஆங்கிலம்/தெலுங்கு/மலையாளம்/கன்னடம்/இந்தி

"நான் கேரளா சாண்டல் சோப்பை விரும்புகிறேன்" ______________
போட்டியில் பங்கு பெறுபவரின் ______________
பெயர் ______________
விலாசம் ______________
______________

முக்கிய குறிப்பு
இரண்டு மீடியம் சைஸ் கேரளா சந்தன சோப் மேலுறைகளை இணைத்து உங்கள் நுழைவுத் தாளை தபாலில் அனுப்பவும்.

கேரளா சாண்டல் சோப் பரிசுப் போட்டி
கேரளா சோப் & ஆயில்ஸ் லிட்.,
கள்ளிக்கோட்டை-673 005.

**உடம்புவலி உங்களைத் தாக்கும்போது
ஸாரிடான் கொண்டு அதைத் தாக்குங்கள்.**

உடம்புவலி மற்றும் தலைவலியிலிருந்து ஸாரிடான் மட்டுமே வெறும் நிவாரணத்தைக் காட்டிலும் அதிகப்பலன் தருகிறது. அதன் விசேட கலவை முறை வலியைப் போக்கும்போதே களைப்பை நீக்கிப் புத்துயிரளிக்கிறது. இங்குதான் ரோஷின் சர்வதேச ஆராய்ச்சி உங்களுக்காக செயல்படுகிறது.





**உடம்புவலியைப் போக்குகிறது ஒரே ஒரு ஸாரிடான்**
ட்ரேட்மார்க் 'ரோஷ்'

HT-RP-8612

ஆக்கசக்தி நெருக்கடியினால் ஏற்பட்ட சங்கடமான நிலை டாடா ஸ்டீலிலுள்ள எங்கள் இளம் நிபுணர்களுக்கு அதைத் திறம்பட சமாளிக்கும் ஆற்றலை அளித்தது..

ஆக்கசக்தி உபயோகத்தில் சேமிப்பு பற்றிய தீவிரமான ஆராய்ச்சிகள் பல புது வழிகளைப் புலப்படுத்தியுள்ளன. கம்பஸ்சன் ஏர் கண்ட்ரோல் ஸிஸ்டம்களைப் பல தொழிலிடங்களில் நிறுவி வியர்த்தமாகும் காஸினால் ஏற்படும் உஷ்ண நஷ்டத்தைக் குறைக்க வழி செய்யப்பட்டுள்ளது; தவிர எரிபொருள் தரமும் சீராக்கப் பட்டுள்ளது. தேவையான இடங்களில் வேஸ்ட்ஹீட் ரெகூப்பரேட்டர் ஸிஸ்டம்கள் மீண்டும் நிறுவப்பட்டிருப்பதோடு அவற்றின் செயலாற்றலை உச்சநிலைப் படுத்துவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஃபர்னஸ்களில் இன்ஸுலேஷன் செய்யப்பட்டதோடு அவற்றில் காலத்திற்கேற்றவாறு புதுமைகள் செய்யப்பட்டுள்ளன. உச்சநிலையில் மறு-உபயோக முறைகளின் பயனாக குளிர்ச்சிக்கான தண்ணீர் பம்ப் செய்வது குறைக்கப்பட்டுள்ளது.

மொத்த உற்பத்திச் செலவில் மூன்றில் ஒரு பங்கு ஆக்கசக்திக்காகச் செலவிடும் தொழிற்துறையில் இந்த சேமிப்புகள் மிக மதிப்புள்ளவையாகும். காரணம், தாங்கமுடியாத ஆக்கசக்திச் செலவின் பளுவை சமாளிக்க இவை உதவுகின்றன.

இளமை மிடுக்கோடு இருப்பவர்கள் என்றென்றும் புதுப்புது சோதனைகளை வரவேற்பார்கள்.



## புதுப்புது சோதனைகள் எங்களுக்கு இளமையூட்டுகின்றன



**டாடா ஸ்டீல்**

# உம்மிடியார்ஸ்

**தரமான தங்க வைர நகைகள் தயாரிப்பதில்**
**70 வருடங்களுக்கு மேலாக பிரசித்திப் பெற்றவர்கள்.**





உம்மிடியாரின் நகைகள் தனிசிறப்பு வாய்ந்தவை. கலை நுட்ப வல்லுனர்களால் திறம்பட உருவாக்கப்பட்டவை. பழமையும் புதுமையும் ஒருங்கே இணைந்தவை. சிறந்த வேலைப்பாடு கொண்டவை. காலத்திற்கேற்ப புதிய மோஸ்தர்களில் நகைகளை தயாரித்து அளிப்பதில் புகழ் பெற்றவர்கள்.

- ஜொலிக்கும் வைர நகைகள்
- மின்னும் தங்க நகைகள்
- அழகிய வெள்ளிப் பாத்திரங்கள்.

**எங்களது "நவரத்ன" சேமிப்பு திட்டத்தில்**
**சேர்ந்து பயனடையுங்கள்.**



நம்பிக்கைக்கும் நாணயத்திற்கும்,

## உம்மிடியார்ஸ்

உம்மிடி ராமைய்யா செட்டி,
குருஸ்வாமி செட்டி அண்டு சன்ஸ்
உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர்.
162, அண்ணாசாலை, சென்னை-600 002.
போன்: 89488 — 81607

**ஞாயிறு விடுமுறை**




# கல்கி

நள ௵ புரட்டாசி 3
செப்டம்பர் 19 1976




## போடு புதிர்!

20 அடி ஆழமுள்ள கிணற்றினடியில் மணலில் ஒரு தவளை உள்ளது. அது சுவரோரமாகத் தாவி வெளியே வர முயற்சி செய்தது. அது முயலும் போது மூன்றடி தாவினால் இரண்டு அடி விழுந்து விடும்! எத்தனை முறை முயன்றால் அதனால் வெளியே வர முடியும்? **ஸ்ரீப்ரியா**

**விடை:** 17 வது முறை முயலும் போது வெளியே வந்து விடும்!





பிரபல வாசனை திரவிய தயாரிப்பாளர்கள் மதராஸ் T. S. R. & கம்பெனியின் ஸ்தாபகர் திரு T. R. கண்ணன் அவர்களின் புதல்வி (Sister of T. S. R. K. அசோக் & T. S. R. K. சந்தானம்) சௌபாக்யவதி பாமாவுக்கும், பம்பாய் பிரபல டாக்டர் K. S. ராகவன் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி ஆராவமுதனுக்கும் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமண வைபவத்துக்கும் அன்று மாலை வரவேற்பின்போது நடைபெற்ற ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரிக்கும், ஏராளமான நண்பர்களும் உறவினர்களும் வந்திருந்து தம்பதிகளை ஆசிர்வதித்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

# செலவு குறையட்டும்; நேர்மை ஓங்கட்டும்!

அரசியல் கட்சிகளுக்குக்கம்பெனிகள் நன்கொடை அளிப்பதற்குத் தடை இருந்து வந்தது. இந்தத் தடை நல்ல நோக்கத்தில் கொண்டு வரப்பட்ட போதிலும் இதனால் கறுப்புப் பண உற்பத்தி அதிகரித்தது. கணக்கில் வராமல் கட்சிகளுக்கு நன்கொடை தரக் கறுப்புப் பணம்தானே உதவும்? இந்த ஆபத்தை உணர்ந்து அரசு தற்போது மேற்படி தடையை நீக்கி விட்டது.

தடை நீங்கியபோதிலும் சில கட்டுப் பாடுகளை விதித்திருக்கிறது. மூன்று ஆண்டுகளின் லாபத்தில் ஐந்து சதவீதம் அல்லது 50,000 ரூபாய் இவற்றில் எது அதிகமோ அதை நன்கொடையாக வழங்கலாம். அரசு நிறுவனம் நன் கொடை வழங்கக்கூடாது.

இவை நல்ல ஏற்பாடுகளே என்று லும் தேர்தல் செலவு கட்சிகளுக்கும் வேட்பாளர்களுக்கும் கணிசமாகக் குறைந்தாலன்றி முழு நன்மை விளை யாது. கறுப்புப் பண உற்பத்தியையும் கறுப்புப் பண நன்கொடையையும் அடி யோடு களையவும் முடியாது.

ராஜாஜி சொன்னார், வோட்டுச் சாவடிக்கு வாக்காளர் வருவதற்குப் பதில் வோட்டுப் பெட்டி வாக்காள ரைத் தேடி அவர் வீடு செல்ல வேண் டும் என்று. நடைமுறை சாத்தியமற்ற விஷயமல்ல இது.

ஒருவேளை இதனைச் சிரமசாத்தியமான காரியம் என்று அரசு கருதுமேயானால் வேறு பலவிதங்களில் தேர்தல் செலவு களைக் குறைத்து வாக்குப் பதிவு நேர்மை யாக நடக்க உதவலாம்.

கொடிகள், தோரணங்கள், ஊர் வலங்கள், வாண வேடிக்கைகள், நட னங்கள், நாடகங்கள் என்று பணம் விரயமாவதற்கு ஓர் எல்லையே இல்லாம லிருக்கிறது இன்று. இவற்றுக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும்.

போஸ்டர் போராட்டங்கள் அநாக ரிக மோசடி வேலைகளாகி விட்டன. கட்சி யின் பெயரும் வேட்பாளர் பெயரும் கொண்ட சுவரொட்டி தவிர மற்றவற் றுக்குத் தடை விதிக்க வேண்டும்.

அச்சடித்து விநியோகிக்கப்படும் தாள் களில் கட்சியின் தேர்தல் அறிக்கையை யும் வாக்காளருக்கு விடும் கோரிக்கை யையும் தவிர வேறு எதுவும் இடம் பெறக் கூடாது.

பொதுக் கூட்டங்களுக்கு இடவசதி யும் ஒளி, ஒலி வசதியும் பஞ்சாயத்துக் களும் நகரசபைகளும் செய்து தந்துவிட வேண்டும். சென்ற தேர்தலில் பெற்ற வோட்டுக்களின் எண்ணிக்கைக்கு ஏற்பக் கட்சிகளுக்கு இந்த வசதிகளைச் செய்து தரலாம்.

எல்லாவற்றையும்விட முக்கியமாக வாஞ்சூ கமிட்டி சிபாரிசு செய்ததுபோல் கட்சிகளின் கணக்கு வழக்குகள் 'ஆடிட்' பரிசீலனைக்கு உள்ளாகிப் பிரசுரிக்கப் படச் சட்டம் இயற்ற வேண்டும்.

இவற்றைச் செய்யாத வரையில் இன்று அமலிலுள்ள தேர்தல் செலவு உச்சவரம்புச் சட்டம் பெயரளவில்தான் இருக்கும்.

கல்கி மலர் 36 இதழ் 8



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# தமிழகம் வழிகாட்டுகிறது!

பசு வதையைத் தடுத்துத் தமிழக அரசு சட்டம் பிறப்பித்துள்ளது. இந்தச் சட்டத்தின் மூலம் தமிழகம் மற்ற மாநிலங்களுக்கு வழி காட்டியாகத் திகழ்கிறது.

தமிழக ஆளுனரையும் அவரது ஆலோசகர்களையும் வாழ்த்துகிறோம்.

பசுவதைத் தடுப்பும் கால்நடைப் பராமரிப்பும் நமது அரசியல் சாசனத்தி லேயே இடம் பெற்றுள்ளன என்றாலும்

இதுநாள்வரை இந்த அம்சத்தில் அரசு தீவிர கவனம் செலுத்தாதிருந்து வந்தது. தற்போது மத்திய, மாநில அரசுகள் இதனை விழிப்புணர்ச்சியுடன் கவனிக்கத் தலைப்பட்டுள்ளன.

பசு வதைத் தடுப்பில் மதச் சார்புள்ள நோக்கம் எதுவும் அரசுக்கு இல்லை; இருக்கத் தேவையும் இல்லை. கால் நடைப் பராமரிப்பு, பசுவதைத் தடுப்பு முதலியன மக்களின் ஆரோக்கியம் பேணவே கூட மிகவும் அவசியமானவை. இதன் முக்கியத்துவத்தைப் பல முறை வினோபா அடிகள் தமது பிரார்த்தனைக் கூட்டங்களில் எடுத்துரைத்து வந்திருக்கிறார். வினோபாஜியின் மனம் தமிழக அரசு பிறப்பித்துள்ள சட்டம் காரணமாகப் பெருவகை அடையும். சட்டத்தில் மதச் சார்பான அம்சம் ஏதும் இல்லாவிடினும் ஹிந்துக்கள் பலரது மனங்கள் இச்சட்டத்தால் விசேஷமான மகிழ்ச்சி அடைவது தவிர்க்க முடியாத ஒன்று.

பால் வளம் பெருகுவதிலும் விவசாயம் செழிப்பதிலும் ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாகியிருக்கிறது.

# தியாகராஜனின் தியாகம்

காந்தி மகானும் ராஜாஜியும் வளர்த்த அப்பழுக்கற்ற தேசப் பக்த திருக்கூட்டத்தில் மற்றும் ஒருவர் குறைந்தார்.



கணிதத் துறையில் எம். ஏ. பட்டம் பெற்ற திரு வி. ஸ்ரீ. தியாகராஜன் சுபிட்சமான எதிர்காலம் வருந்தி அழைத்த சமயம் 1931ம் ஆண்டு திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தையும் ராஜாஜியையும் பார்க்க வந்தார். வந்தவர் வந்த இடத்திலேயே தங்கிவிட்டார். ஆசிரமப் பணியிலும் தேசப் பணியிலும் ஈடுபட்டார். பல முறை சிறைவாசம் செய்தார். ஹரிஜனங்களுக்காகக் கிணறுகள் வெட்டியும், பள்ளிகள் ஏற்படுத்தியும் கிறிஸ்தவர்களாக மதம் மாற இருந்த ஹரிஜனங்களைத் தடுத்தும், கதர் பிரசாரம் மதுவிலக்குப் பிரசாரம் செய்தும் அவர் ஆற்றிய சமூகப் பணிகள் பலப் பல. சிறந்த தெய்வ பக்தராகிய தியாகராஜன் தேவாரம், திருவாசகம், பிரபந்தங்கள் வடமொழி பக்தி சுலோகங்கள் ஆகியவற்றில் மெய்ம்மறந்து ஈடுபடுவார். ''சமூகத் தொண்டும் தெய்வ பக்தியும் வேறு வேறல்ல'' என்ற கொள்கையை அனுஷ்டித்து வந்த தியாகராஜன் தமது வாழ்நாளின் இறுதி ஆண்டுகளில் தொழு நோயாளர்களுக்காக ஆசிரமத்தில் தங்கி அரும் பணி ஆற்றி வந்தார். ராஜாஜியிடம் பெரும் பக்தி கொண்டிருந்த தியாகராஜன், தில்லியில் ராஜாஜிக்குச் சில நிறுவ முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட இருப்பதைக் கேட்டு மகிழ்ந்து அதனையொட்டி ஸ்ரீமதி எம். எஸ். உதவிக்கச்சேரி சென்னையில் வழங்குகிறார் என்பதை அறிந்து சென்னைக்கு வந்து அந்நிகழ்ச்சியைக் கேட்டுக் களித்தார்.

இந்த உத்தமமான ராஜாஜி பக்தர் தமது அறுபத்தெட்டாவது வயதில் பாரத அன்னையின் திருவடி நிழலில் நிரந்தரமாகச் சேர்ந்துவிட்டார்.

---

**ராஜாஜி சிந்தனை**

## உண்மையான தொண்டு

எத்தனை நிழல்கள் சேர்ந்தாலும், பொருளாகிவிட முடியாது. எத்தனை ஆசைகள் சேர்ந்தாலும் ஒரு சாதனையாகிவிடாது. உண்மையில் பலன் தருவது செயல்தான். ஆசைகள் நல்லதுதான். ஆனால் அந்தரங்கத்திலிருந்து உந்துதல் பெற்றால் அந்த ஆசை காரியமாகும். இல்லையேல் ஆசைகளைப் பற்றிப் பேசிப் பேசியே அலுத்துக் காரியத்தில் இறங்காமல் தடுத்துவிடும். ஆகவே, ஆசைகள், மனிதனைச் செயல்படுத்த அந்தரங்க உத்வேகம் வேண்டும். நாங்கள் இதைச் செய்வதாக இருக்கிறோம், அதைச் செய்வதாக இருக்கிறோம், இதற்குத் திட்டம் வகுத்திருக்கிறோம், அதைச் செய்யத் திட்டம் போட்டிருக்கிறோம் என்று எழுதுவதோ அச்சிடுவதோ தற்கொலைக்கு ஒப்பாகும். நாம் சாதித்த சாதனையே தன்னைப் பற்றிக் கூறிக் கொள்ளும். சுய தம்பட்டம் அடித்துக் கொள்வதையும் சுய விளம்பரப்படுத்திக் கொள்வதையும் தவிர்ப்போமாக. உண்மையான தொண்டிற்கு அது ஒருநாளும் இணையாகாது.

(செப்டம்பர் 1953-ல் மேற்கு மாம்பலம் ஹெரால்ட் ஸெண்டருக்கு அளித்த வாழ்த்துச் செய்தியிலிருந்து)


100
ரோஜாக்கள்
மலர்க!


மாசே துங்


பிரதமரின்
விஜயம்
வறட்சி
நிவாரண நிதி உதவி
தமிழக
வறட்சிப் பகுதிகள்


7 6 5
தமிழக அரசியல்
அ.தி.மு.க
தி.மு.க.
கட்சி
மாறிகள்

## அமுல்—உங்கள் பால்காரர்



## அமுல்—உங்கள் தேநீர்க்காரர்



½ லிட்டர் டம்ளரில் 2½ டேபிள்ஸ்பூன் அமுல் மில்க் பவுடரை நன்கு குவியச் செய்து போடவும். சிறிதளவு சுடுநீருடன் கலந்து நன்கு கலக்கிப் பசைபோல் ஆக்கிக்கொள்ளவும். பின் அதன் மேல் வரை சுடு நீரை மேலும் சேர்த்து நன்கு கலக்கவும். உங்கள் குழந்தைக்கான க்ளாஸ் அளவு பால் தயார்! (முழுமையான விவரங்களுக்கு டின் மீது பார்க்கவும்.) அமுல் மில்க் பவுடர் தேயிலை பானத்திற்கும் காப்பிக்கும் கூட மிக ஏற்றதாகும்.

## அமுல்—உங்கள் தயிர்க்காரர்



கறந்த பாலிற்குச் செய்வது போலவே, மேற்கண்ட முறைப்படி பாலைச்செய்து, சாதாரணமாகச் செய்வது போலத் தயிராகத் தோய்க்கவும்.




# அமுல்

## மில்க் பவுடர்

### வீட்டினுள் இயங்கும் ஒரு பால் பண்ணை



விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோவாப்பரேட்டிவ்
மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன்
லிமிடெட், ஆனந்த்

RADEUS/AMP-1

# ஜீவகாருண்யம்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்





"பகவான் நம்மைக் கண்திறந்து பார்க்க வேண்டும்'' என்று எல்லோரும் குறைப்பட்டுக்கொள்கிறோம். கருணைக் கடலான ஈச்வரன் கண்ணைத் திறந்து பார்த்துக் கொண்டேதான் இருக்கிறான். ஏன் அவன் நாம் இஷ்டப்படுகிற மாதிரி நமக்கு சௌபாக்கியங்களைத் தரவில்லை என்றால், நாம் கண்ணைத் திறந்து லோகத்தின் கஷ்டங்களைப் பார்த்து, அது நிவிருத்தியாவதற்கு நம்மாலான உபகாரத்தைப் பண்ணுமல் இருப்பதால்தான். நம் மனசு மற்றவர்களிடம் தயையால் நிரம்பினால், உடனே கருணையே உருவமான ஈச்வரனும் நமக்குத் தயை புரிவான். ஆனதால், கண்ணைத் திறந்து பார்க்க வேண்டியது நாம்தான், பகவானல்ல.

ஒருத்தன் சரியானபடி சநாதன தர்மத்தைப் புரிந்து கொண்டு, அநுஷ்டித்துக் காட்டினால் அவனுடைய ஆசாரம், அநுஷ்டானம், விரதம், சம்பாத்தியம் முதலான எதுவுமே தன்னலனுக்காக இல்லை. ஆனால் இந்த உயர்ந்த தத்வம் — வெறும் தத்வமாக புஸ்தகத்திலும் மூளையிலும் மட்டும் இருந்துகொண்டிருக்காமல் வாழ்க்கையிலேயே பிரகாசித்துக் கொண்டிருந்த தர்மம் — எப்படியோ பிற்காலத்தில் வீணாகி விட்டது. இதை மறுபடி புத்துயிரூட்ட வேண்டும், revive பண்ணவேண்டும், என்றுதான் 1940 லிருந்து 'முத்ராதிகாரிகள்' என்று தஞ்சாவூர் ஜில்லாவில் அநேகமாக எல்லாக் கிராமங்களிலும் நம் மடத்திலேயே ஒருத்தருக்கு அதிகாரம் தந்து அவர் முயற்சியில் ஜனங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து பொதுநலப் பணிகள் செய்ய ஏற்பாடு செய்தோம். அதிலே பூர்த்த தர்மம் என்று மேலே சொன்ன குளம், கிணறு வெட்டுகிற காரியங்களோடு, இந்தத் தர்மமெல்லாம் பூர்த்தியாகிற பகவத் கைங்கரியங்களான தேவாலயப் பாதுகாப்பு, ஏகாதசி புராண படனம் முதலியனவும் நன்றாக நடந்து வந்தன. கோயில் கோபுரங்களிலும், மண்டபங்களிலும் முளைத்திருக்கும் மரம், செடிகளைப் பிடுங்குவது, பிராகாரத்தில் முளைத்திருக்கும் நெருஞ்சி முள் முதலானவைகளை அப்புறப்படுத்துவது முதலான காரியங்கள் தேவாலயப் பாதுகாப்பாகச் செய்யப்பட்டன.

ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஒவ்வொரு நாளும் ஒரு பசுவுக்காவது, ஒரு பிடியாவது புல் கொடுக்க வேண்டும்; தோட்டம் உள்ள எல்லோரும் அதில் கொஞ்சமாவது மாட்டுக்கேற்ற அகத்திக் கீரை போட வேண்டும் என்றெல்லாம் ஏற்பாடு செய்து அதன்படியே ரொம்பப் பேர் நடத்தி வந்தார்கள். இதற்கெல்லாமாவது கொஞ்சம் செலவு, தியாகம் பண்ண வேண்டியிருக்கிறது. இதுகூட இல்லாமல், நம் அகத்தில் கறிகாய் முதலியவற்றை நறுக்கும்போது தோலை வீணாகத் தானே போடுகிறோம்? அப்படிப் போடாமல், சிலர் வீடு வீடாகப் போய் இந்தத் தோலை எல்லாம் 'கலெக்ட்' பண்ணி மாடுகளுக்குப் போட ஏற்பாடு பண்ணினோம். நான் திரும்பத் திரும்பச் சொல்லிச் சொல்லி அநேக இடங்களில் இந்தக் காரியம் நடந்தது; இப்போதும் கூடப் பல இடங்களில் தொடர்ந்து நடக்கிறது.

கறவை நின்ற மாடுகளை அடிமாட்டுக்காக விற்காமல், ஜீவிய காலம் வரை அவற்றைக் காப்பாற்று வழி செய்ய வேண்டியது நம் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை — தாயாருக்குச் செய்ய வேண்டிய கடமைக்குச் சமதையான கடமை.

ஆப்கானிஸ்தான் மாதிரியான துருக்க ராஜ்யங்களில் கூடப் பல வருஷங்கள் முன்பே கோஹத்தியை ban செய்திருக்கிறார்கள். நம் தேசத்தில் பிரிட்டிஷ்காரர்கள் இதில் வேண்டுமென்றே மதத் துவேஷங்களைத் தூண்டிவிட்டிருந்தார்கள். எந்தச் சர்க்கார் இருந்தாலும், எந்தச் சட்டம் வந்தாலும், வராவிட்டாலும், பசுக்கள் கசாப்புக் கடைக்குப் போகாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம்முடைய புனிதமான கடமை என்று நாம் இருந்தோமானால் கோமாதாவுக்கு ஹானி இல்லை. இதிலே நாம் குஜராத்தி, மார்வாரிகளைப் பார்த்து அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். முன் காலங்களில் 'பசுமடம்' என்று வைத்து நம் கிராமமெல்லாம் போஷிக்கப்பட்ட இந்தத் தர்மத்தில் பிற்பாடு நாம் சிரத்தை இழந்து விட்டோம். ஆனால் பிஞ்சரபோல், 'கோசாலா என்று

---

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]

வைத்து இந்த வடக்கத்திக்காரர்கள் எத்தனை வாத்ஸல்யத்தோடு பசுக்களைப் பராமரிக்கிறார்கள்?

கோவதை கூடாது என்று சட்டம் பண்ணி விடலாம். ஆனால் கறவைக்கும், உழவுக்கும் பிரயோஜனமில்லாத மாடுகளைப் பராமரிக்க மக்களான நாம் தக்க ஏற்பாடு பண்ணவிட்டால் அவை வயிறு காய்ந்து குற்றுயிரும் குலை உயிருமாகக் கஷ்டப்பட வேண்டித்தான் வரும். கோரக்ஷணம் என்பது ஜீவகாருண்யத்துக்கு ஜீவகாருண்யம்; அதுவே ஒரு பெரிய லக்ஷ்மி பூஜையும் ஆகும்.

முதலில் நான் சொன்னமாதிரி, நானே கிராமம் கிராமமாகப் போய் இந்தக் காரியங்களை emphasize செய்தபோது, நல்ல response இருந்தது. அதுவும், இந்தக் குளம் வெட்டுகிற கைங்கரியத்தைப் பார்க்கும்போது எனக்கே ரொம்ப நிறைவாக இருந்தது. கூலிக்கு வேலையாக இல்லாமல் அன்புப் பணியாக இது நடக்க வேண்டும் என்றுதான் ஏற்பாடு. ஆனால் ரொம்பவும் ஏழைகளாக இருக்கப்பட்ட குடியான ஜனங்களுக்குச் சாப்பாடு போடுவது என்று வைத்திருந்தோம். இருந்தாலும் அநேக இடங்களில் அந்தப் பரம ஏழைகள் கூடத் தாங்களே சோறு கட்டிக் கொண்டு வந்து உற்சாகத்தோடு குளம் வெட்டியதைப் பார்க்கிறபோது, 'நம் தேச ஏழைகளுக்கு இன்னம் நல்ல பண்புகளெல்லாம் போகவில்லை; நாம்தான் அதைச் சரியாகக் காரியத்தில் கொண்டு வரவில்லை' என்று தெரிந்தது. ரதோத்ஸவம் மாதிரி பெரிய பெரிய மிராசுதாரிலிருந்து அந்த மிராசில் கடைசியாக நிற்கிற பண்ணையாள் வரையில் — சிரௌதிகளின் பத்தினியிலிருந்து புல்லுக்கட்டுக்காரி வரையில் — எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பூர்த்த தர்மம் செய்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. "அப்புறம் நடக்கிற பரோபகாரம் இருக்கட்டும்; இப்போது இப்படி சமூகம் முழுக்க ஐக்கியமாகச் சேர்ந்திருக்கிறதே, இதுவே போதும்" என்று இருந்தது. அப்புறம் நான் நூறாயிரம் காரியத்தை வைத்துக் கொண்டு எங்கெங்கோ சுற்றப் போனதில் அவர்களுக்கு உற்சாகம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்துவிட்டது. இதை விட்டு விட்டுப் போனது என் தப்புத்தான்.

(தொடரும்)

## அவுட்டுச் சிரிப்புக்கு அபத்த ஜோக்ஸ்!




முனுசாமி: எங்க வீட்டுக் குழாயிலே மூணு நாளா தண்ணியே வரலே?
ராமசாமி: ஏன்?
முனுசாமி: நான்தான் குழாயை மூடியே வச்சிருந்தேனே!

---

முனு: கோவிலே ஏன் வலதுபுறமாகச் சுற்றுகிறோம், தெரியுமா?
ராம: தெரியாது.
முனு: இடதுபுறமாகச் சுற்றக்கூடாது, அதனால்தான்.

---

முனு: கோவிலில் கற்பூரத்தை ஏன் தட்டில் ஏற்றுகிறார்கள் தெரியுமா?
ராம: தெரியாதே.
முனு: கையில் ஏற்றினால் சுடுமோன்னோ அதனால்தான்.

---

முனு: சைக்கிளின் பின்னால் ஓர் ஆளுடன் சென்று கொண்டிருந்தேன். போலீஸ்காரர் "இப்படி சைக்கிளில் பின்னால் ஒருவர் உட்கார்ந்து போவது தவறு" என்றார்.
ராம: அப்புறம் என்ன செஞ்சாய்?
முனு: அந்த ஆளை முன்னால் உட்கார வைத்துக் கொண்டு சென்றேன்.

---

முனு: அண்ணே! ரயிலில் 2 Tier என்று எழுதி யிருக்கிறார்களே, அது தவறு.
ராம: எப்படி?
முனு: சக்கரத்திலே ஒரு டயர்கூட இல்லேப்பா!

---

முனு: வாழைப் பழத்தில், பழம் தோலின் உள்ளே ஏன் இருக்கிறது, தெரியுமா?
ராம: ஏன்?
முனு: தோலின்மேல் பழம் இருந்தால் ஈ, எறும்பெல்லாம் வரும்.

---

முனு: அண்ணே, நீ பஸ்ஸில் செல்லும்பொழுது ஒரு சீட்டுக்கட்டை எடுத்துக் கொண்டு போ.
ராம: ஏன் தம்பி?
முனு: பஸ்ஸில் கண்டக்டர் "சீட்டிலே போய் உட்கார்" என்பார்.

---

முனு: யாரோ ஒருவர் கடிதத்தில் "பின்-கோட்" எழுது என்றார்.
ராம: நீ என்ன செஞ்சாய்?
முனு: எனக்கா தெரியாது. பின்னால் இரண்டு கோடு போட்டேன்!

— எஸ். சந்திரசேகர்

அதிகப் பரப்புக்குப் பூச,

அதிக சேமிப்புக்கு,

கறைகளை மறைக்க,

# ட்ராக்டர்—இந்தியாவின் அதிகமாக விற்பனையாகும் ஸிந்தெடிக் வாஷபிள் டிஸ்டெம்பர்

● ஒவ்வொரு முறையும் தரப் பரிசோதனை—ஒவ்வொரு முறையும் அதன் தரம் 50 முறைகள் ஆராய்ச்சிக் கூடத்தில் கடுமையாகப் பரிசோதிக்கப்படுகிறது.

● துடைத்தால் போதும் தூய்மையாகிவிடும்.

● சீரான நீடித்த ஃபினிஷ்—நிறம் குன்றுமல நீடித்து நிற்கும்.

● வண்ணங்களில் எண்ணிலா ரகங்கள்.




கண்கூடான நன்மைகளைப் பெற, ட்ராக்டர் வண்ணம் பிரயோகிக்குமுன் டெகோப்ரைம் சிமெண்ட் ப்ரைமரை உபயோகியுங்கள்.



ஏஷியன் பெயிண்ட்ஸ்

CMAP-3-183 tam.

# அப்பாவுக்குக் கோபம் வந்தால்!

**யா**ராவது ஜோசியரைக் கேட்டிருந்தால் லலிதாவுக்குப் போதாத வேளை என்று சொல்லியிருப்பார்களோ என்னவோ? அன்று அவளுக்கு அடுக்கடுக்காகச் சோதனைகள்!

லலிதாவின் வீட்டுக்காரர் சிவராமன் தங்கக் கம்பி என்றால் தங்கக் கம்பிதான். ஆனால் கோபம் வந்தால் பிரளயம்தான்! எரிமலை வெடித்தாற்போலத்தான்! என்ன பேசுவார், என்ன செய்வார் என்று சொல்ல முடியாது. அப்படி நடந்து கொண்டதற்காக அவர் பின்னால் பச்சாத்தாபப்படுவார்.

லலிதாவுக்கும் குழந்தைகளுக்கும் அவரைக் கண்டால் நடுக்கம். எதற்குக் கோபம் வரும் என்று தெரிந்தால் எச்சரிக்கையாக இருக்கலாம். பெரிய பெரிய தவறுகளை யெல்லாம் 'போகட்டும் விடு' என்று மன்னித்துவிடுவார். இருபது காசு பெறாத விஷயத்துக்காக ஊரைக் கூட்டிக் கத்தி ரகளை செய்வார்.

புத்தம் புதிய பட்டுப் பாவாடையை வாங்கின அன்றே ஆணியில் மாட்டிக் கிழித்துக் கொண்டு வந்தாள் பெண் விஜயா. ''கொஞ்சம் பார்த்து உட்காரக் கூடாதா?'' என்று கேட்டதோடு சரி. அவருக்குத் தெரியாமல் ஐந்து பைசா எடுத்துக் கொண்டு போய் ஒரு கடலை மிட்டாய் வாங்கித் தின்று விட்டான் சின்னப் பையன் — பெல்ட்டை எடுத்து விளாசி விட்டார்.

அப்போதுதான் ஒரு கிலோ வெண்ணெயைக் காய்ச்சிக் கீழேஇறக்கி வைத்திருந்தாள் லலிதா. பந்து விளையாடிக் கொண்டு ஓடி வந்த சின்னப் பயல் அப்படியே கீழே சாய்த்து விட்டான். காலில் தெளித்துக் கொப்பளித்து இருக்கப் போகிறதே என்று பையனைக் கூப்பிட்டுப் பார்த்தாரே தவிர, நெய் போயிற்றே என்று லலிதா பதறியதைப் பொருட்படுத்தவில்லை. இப்படிப்பட்ட அலாதியான சுபாவம் படைத்தவர் சிவராமன்.

மறுநாள் சிவராமன் ''காம்பி''லிருந்து வருகிறார். எப்பொழுதுமே அவர் 'காம்ப்'பிலிருந்து இரும்பும்போது கொஞ்சம் எச்சரிக்கையாகத்தான் இருக்க வேண்டும். இந்தக் காலத்தில் எந்த ஆபிஸில்தான் தம் கீழ் இருப்பவர்களை இரண்டு வார்த்தை பேச முடிகிறது? உடனே 'ஒழிக' கோஷம் போட்டுக்கொண்டு கொடி பிடிக்க ஆரம்பித்து விடுவார்கள். அங்கே யெல்லாம் அடக்கி அடக்கி வைத்திருந்த கோபம் வீட்டுக்குத் திரும்பியவுடன் மனைவி மீதும் குழந்தைகள் மீதும் மடை திறந்தாற்போல் பாயும்.

அவர்கள் வீட்டில் ஒரு ராலே சைக்கிள் இருந்தது. 'முப்பத்திரண்டு ஆண்டுகள் முன்பு என் மாமா வாங்கியது' எனப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார் சிவராமன். மாமா, மாமாவுக்குப் பின் சிவராம் ஆகியோர் உபயோகித்தும் கூட அந்தச் சைக்கிள் நல்ல நிலையில் இருந்தது. இப்போது ஆபீஸ் கார் வந்து அழைத்துப் போவதால் அதை உபயோகிப்பதில்லை.

ஆனால் அவர் பிள்ளை ரவி அதை ஓட்ட ஆரம்பித்ததிலிருந்து அந்தச் சைக்கிள் நகரும் போது ஒரு தகர டப்பாவைத் தரையில் இழுக்கும் ஒலி கேட்கத் தொடங்கியது. அது அத்தனை தூரம் ஆடிப் போயிருந்தது. ''அதை எடுக்காதே. என் மாமாவின் ஞாபகத்துக்காகத் தான் நான் அதை வைத்திருக்கிறேன்'' எனப் பலமுறை எச்சரித்திருக்கிறார் சிவராமன். ஆனால் ரவி தன் அம்மாவிடம் கெஞ்சிக் கூத்தாடி, சத்தியாக்கிரகம் செய்து எடுத்துப் போய் அவர் வருவதற்குள் திருப்பிக் கொண்டுவந்து வைத்து விடுவான். சில சமயங்களில் அப்படி வைக்காமல் வகையாக மாட்டிக் கொண்டு உதையும் பட்டிருக்கிறான்.



மூன்று நாட்களாகச் சிவராமன் ஊரில் இல்லாதபோது, அவன் சாப்பிடும் நேரம், தூங்கும் நேரம் தவிர மீதிப் பொழுதெல்லாம் சைக்கிள் சவாரிதான். கடைசியில் இன்று அவன் வேறு ஒருவனுக்குக் கடன் கொடுத்திருக்கிறான். அந்த வானரம் சைக்கிளைக் கொண்டு போய்ச் சுவரில் மோதியிருக்கிறது. டைனமோ லைட் தூள் தூள்! முன் சக்கரம் எட்டாக வளைந்து போயிற்று. இரண்டு பேராகத் தூக்கி வீட்டுக்குள் போட்டார்கள். சைக்கிள் கடைக்காரரை அழைத்து வரச் சொல்லிக் காட்டினாள் லலிதா. சரிசெய்து தர எண்பது ரூபாய் வரை ஆகும் என்று தெரிந்தது. அப்படியும் சைக்கிள் திரும்ப ஐந்து நாட்கள் ஆகும் எனச் சொன்னார்கள். ''உதைபட்டுச் சாகத்தான் நீ பிறந்திருக்கிறாய்!'' என்று நொந்து கொண்டாள் லலிதா.




இந்த விஷயத்தை எப்படிச் சமாளிப்பது என்று அவள் குழம்பிக் கொண்டிருந்தபோது விஜயா பள்ளிக்கூடத்திலிருந்து அழுதபடி ஓடிவந்தாள். அவள் கழுத்தில் போட்டிருந்த மூன்று பவுன் சங்கிலியைக் காணோம். சும்மா இருக்கும்பொழுதெல்லாம் அவள் கைவிரல் அந்தச் சங்கிலியைத்தான் நெருடிக் கொண்டிருக்கும். 'தொடாதே! அறுந்து விழுந்து விடும்!' என எச்சரித்தபடிதான் இருந்தாள் லலிதா. அவள் பயந்தது பலித்து விட்டது. பள்ளிக்கூடத்தில் தேடிக் கொண்டிருக்கிறார்கள். கிடைத்தால் கொடுத்துவிடுவதாகச் சொன்னார்கள். லலிதாவுக்கு நம்பிக்கையில்லை.

அந்தச் சங்கிலியில் புலி நகம் கோத்துச் சிவராமன் தம் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்தார். தளதளவென்றிருந்த அவரது உடலில் அந்தச் சங்கிலி ஜொலித்தது.

விஜயா ஒரு நாள் தன் அம்மாவைத் தனியாகக் கூப்பிட்டாள். போய்விட்டு வந்த லலிதா ஒரு ஸ்பூன் சர்க்கரையுடன் சிவராமனைத் தேடி வந்து விஷயத்தைச் சொன்னாள். ''அப்படியா?'' எனக் கேட்ட சிவராமன் தம் கழுத்தில் இருந்த சங்கிலியை மறு கணம் கழற்றினார். ''இதோ பார் லலிதா! இது என் இருபத்திரண்டாம் வயதில் என்னுடைய சம்பளத்தில் வாங்கிப் போட்டுக் கொண்டது. என் பெண் இன்றைக்கு என் தோளுக்குச் சமமாக வளர்ந்து விட்டாள். இதிலிருக்கும் புலி நகத்தைக் கழற்றி அதற்குப் பதில் ஒரு டாலரை மாட்டி அவள் கழுத்தில் போடு!'' என்றார். பாவிப் பெண்! ஒரு நிமிஷத்தில் அதைத் தொலைத்து விட்டுவந்து நிற்கிறாள்.

மலை போன்ற இரண்டு விஷயங்கள் மனத்தைத் தாக்கியதால் லலிதாவுக்கு எதிலுமே மனம் செல்லவில்லை. எல்லாத் தெய்வங்களுக்கும் தெரிந்த மாதிரி யெல்லாம் வேண்டிக் கொண்டாள்.

''ஓ!'' என்று பெரிதாக அழுது கொண்டு வந்தான் கடைசிப் பிள்ளை பிரபு. நான்கு மணிக்குப் புதிய டிராயர், புதிய சட்டை போட்டு விளையாட அனுப்பினால் அவன் இரண்டையும் கிழித்துக் கொண்டு பத்து இடங்களில் காயம் பட்டுக் கொண்டு திரும்பி யிருந்தான்.

''அடப் பாவி!'' என்றாள் லலிதா இடிந்து போய். அவனுக்கு வேறு உடை மாற்றி எதிரிலிருந்த டாக்டர் வீட்டுக்கு அழைத்துப் போய் ஊசி போட்டு விட்டு வீட்டுக்குத் திரும்பினாள். மறுநாள் சூரிய உதயமே ஆகக் கூடாது என்று பயந்த நளாயினியின் நிலையில் லலிதா இருந்தாள். அன்றிரவு லலிதா— தூங்கவேயில்லை.

பொழுது விடிந்து விட்டது. குழந்தைகள் எழுந்து விட்டார்கள். புத்த

கத்தை எடுத்து வைத்துக் கொண்டு படிப்பது போல் பாவனை செய்தார்கள்.

எட்டரை மணிக்குச் சிவராமனின் "ஆர்டர்லி" வேலு வந்துவிட்டான். "ஐயா" வந்து கொண்டிருப்பதாகக் கட்டியம் கூறினான். எல்லோருடைய முகங்களும் வெளிறடைந்தன.

அவன் பார்வையில் அந்தச் சைக்கிள் பட்டது. "ஐய்யோ ! இது என்னம்மா?" எனப் பதறிப் போனான். லலிதா அவனிடம் ஒன்றுவிடாமல் சொல்லி அழுது தீர்த்தாள்.

"ஃபைல்" மூட்டையுடன் வேலு முன்னால் வரச் சிவராமன் உள்ளேவந்தார். யாருடனும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மேஜையடியில் போய் உட்கார்ந்தார்.

"வேலு ! அந்த டெண்டர் ஃபைலை எடு!" என்றார்.

வேலு மூட்டையை அவிழ்த்தான். ஒரு முறைக்கு இரு முறை அடுக்கினான்.

"பைலைக் காணோமுங்க !" என்றான் வேலு நடுங்கியபடி.

"காணோமா?" — பரபரப்புடன் எழுந்த சிவராமன் தாமே ஒவ்வொன்றாகக் கலைத்துப் பார்த்தார். எங்கேயும் இல்லை.

டெலிபோனைச் சுழற்றித் தாம் போய் வந்த ஊருக்குக் "கால்" போட்டார். அங்கிருந்து ஓர் ஆளை அனுப்பித் தாம் தங்கியிருந்த அறையில் தேடச் சொன்னார்.

டெலிபோன் கால் கிடைத்தது. ஹோட்டலில் 'ஃபைல்' இல்லை. அவர் போயிருந்த அலுவலகத்திலும் அது இல்லை.

"இனியும் பேசாமல் இருப்பது தப்பு..... மானேஜிங் டைரக்டருக்குத் தெரிவிக்க வேண்டியதுதான்!" என்றார் சிவராமன். குரல் கம்மத் தம் மேல் அதிகாரியைக் கூப்பிட்டார். 'லைன்' கிடைக்கவில்லை.

வேலு பரபரப்புடன் ஓடி வந்தான். "சார்! ஃபைல் கிடைத்துவிட்டது. பத்திரமாக இருக்க வேண்டும் என்று சொன்னீர்கள், இல்லையா ? என் பெட்டியின் அடியில் வைத்திருந்தேன்.... மறந்துவிட்டது..." என்றான்.

சிவராமனின் கண்கள் மலர்ந்தன. முகத்தில் சிரிப்பு வந்தது. "போடா !... முட்டாள் ! கொஞ்ச நேரத்தில் என்ன பாடு படுத்திவிட்டாய் ?" எனச் செல்லமாகக் கடிந்து கொண்டார்.

"உம்... சரி, சரி.... சீக்கிரம் போய்ச் சாப்பிட்டுவிட்டு வா!... நம்ம சைக்கிளையே எடுத்துக் கொண்டு போ !" என்றார்.

லலிதா சைக்கிளுக்கு ஏற்பட்ட கதியைக் கைகளைப் பிசைந்து கொண்டு திக்கித் திக்கிச் சொன்னாள்.

"உம்... அதற்கு ஆயுசு அவ்வளவுதான் ! தூக்கி எறி வெளியில்!" என்றார்.

தம் கைப் பையைத் திறந்தவர் நூதனமாக வளையலை எடுத்தார். "அங்கே வளையல்கள் நன்றாக இருந்தன. விஜயாவுக்கு ஒரு செட் வாங்கி வந்தேன். எங்கே அவள் ?"

விஜயா தலையைக் குனிந்தபடி வந்தாள். பிரளயம் எப்போது ஆரம்பம் ?

"என்ன கழுத்து மூளியாக இருக்கிறது ? செயின் அறுந்துவிட்டதா ?"

லலிதா மென்று விழுங்கியபடி சொன்னாள். "நம் தப்பு!... எத்தனை நாட்களாகக் கழுத்தில் இருக்கிறது? எடுத்துப் பார்த்து அழித்துப் புதிது பண்ணியிருக்க வேண்டும். உனக்கும் தோணலை.... எனக்கும் தோணலை..."

விஜயாவின் முகத்தில் அப்போதுதான் களையே பிறந்தது.

"எங்கே அவன் சின்னவன் ? என்னை நச்சரித்தான் என்று கிரிக்கெட் மட்டை, பந்து வாங்கி வந்திருக்கிறேன்!" என்றார்.

சின்னவன் நொண்டியபடி வந்தான். சிவராமன் நல்ல 'மூடில்' இருந்தார்.

"எங்கேடா ? எந்த ராஜாவோட யுத்தத்துக்குப் போய்விட்டு வந்தாய் ?" எனக் கேட்டார்.

"காயம் எல்லாம் ஆறிவிடும்.... இந்த டிராயரையும் சட்டையையும் பாருங்கள். எப்படிக் கிழித்துக் கொண்டு வந்திருக்கிறான்?" எனக் காண்பித்தாள்.

"போடி ! நீ ஒண்ணு !.... எலும்பு எதையும் முறிச்சுக்காம முழுசாத் திரும்பியிருக்கானே, அதுவே பெரிசு !" என்று தம் பையனை மடியில் ஏற்றிக் கொண்டார்.

வேலு வீட்டிலிருந்து திரும்புவதற்குள் ஆபீஸ் கார் வந்துவிட்டது. சிவராமன் காரில் ஏறிக் கொண்டார். "அவன் வந்தால் சீக்கிரம் ஆபீசுக்கு வரச் சொல் !" எனக் கூறிவிட்டுப் போனார்.

வேலு வந்தான். அவனைப் பார்க்க லலிதாவுக்குப் பரிதாபமாக இருந்தது.

"பாவம், வேலு ! நீ இன்றைக்கு யார் முகத்தில் விழித்தாயோ ? சரியானபடி மாட்டிக் கொண்டாய் !" என அனுதாபப் பட்டாள் லலிதா.

"வழக்கம் போல் உங்கள் முகத்தில்தான் விழித்தேன், அம்மா !" என்றான் வேலு. லலிதாவுக்குத் தூக்கிவாரிப்போட்டது.

"ஆமாம், அம்மா ! மணிபர்ஸிலே நீங்களும் ஐயாவும் சேர்ந்து இருக்கிற படம் இருக்குது... எங்கேயோ அனாதையாகக் கிடந்த எனக்கு இந்த வேலை கிடைச்சது உங்க தயவாலேதானே ?... காலையிலே நீங்கள் என்னிடம் நடந்தது எல்லாம் சொன்னப்போ எனக்கு ரொம்பப் பயமாயிடுச்சு... ஐயா குணம் தெரியாதுங்களா ?"

"ஆமாம்..... ஆமாம்... நான் எவ்வளவு நடுங்கிண்டு இருந்தேன்னு அந்த மீனாட்சிக்குத் தான் தெரியும்..."

"ஃபைல் எங்கேயும் போகலை.... என் பெட்டிக்கடியில்தான் பத்திரமாக வைத்திருந்தேன். எப்படியம்மா மறந்து போகும்? ஐயா கவனத்தை வேறுபக்கம் திசை திருப்பத்தான் நான் அப்படிச் சொன்னேன்....."

"வேலு !"

"ஆமாம், அம்மா...! சின்னச் சின்ன அலையெல்லாம் பெரிய அலை அடிக்கக்கிட்டுப் போயிடும்.... சின்னச் சின்ன நஷ்டமெல்லாம் பெரிய நஷ்டத்துலே மறைஞ்சு போகும். ஃபைல் தொலைஞ்சுதான் போயிடுத்துன்னு தீர்மானமே செஞ்ச பிறகு அது கிடைச்சதுல்லே எதுவுமே அவருக்குப் பெரிசாத் தோணல்லே" என்றான் வேலு.

"உன் கணக்கு தப்பாகப் போகவில்லை, வேலு !" என்றாள் லலிதா முகத்தில் நன்றி உணர்ச்சி பளபளக்க !

## உலகிலேயே முதன் முதலாக

# ப்ளீச் செய்யாமலே கருநிற மேனியை சிகப்பாக்கும் க்ரீம்




உலகு காணும் புதுமை: நிறத்தைக் கரைக்காமலே (ப்ளீச் செய்யாமலே) கரு மேனியைச் சிகப்பாக்கும் சாதனம் எக்காலத்திலும் இருந்ததில்லை. சருமத்தைச் சிவப்பாக்க இதுநாள்வரை செய்த முயற்சிகள் எல்லாமே குருட்டு முயற்சிகள், முரட்டு முறைகள். ப்ளீச்சுகளின் சங்கதி உங்களுக்குத் தெரியும்: இருக்கும் நிறத்தையும் கரைத்து வெளிற வைத்து விடும். அடிக்கடி உபயோகிப்பதோ ஆபத்து: காரணம், சருமத்தையே பாதிக்கும் அவற்றின் கடுங்குணம்.

விடிவெள்ளி காட்டும் விஞ்ஞான சாதனையாம் ஃபேர் அண்ட் லவ்லி இரு வழிகளில் வேலை செய்கிறது:

1. உள்ளூர வேலை செய்யும் வைட்டமின் ஒன்று அதிலுள்ளது.

இந்தக் க்ரீமை இடும்போதே, இதிலுள்ள வைட்டமின் சருமத்தினுள் இறங்குகிறது. இழைத்துத் தடவும் போதே உணருவீர்கள் இதன் செயல்வேகத்தை; பரவும் சருமக் கருமையினை மெல்லத் திசைதிருப்புகிறது இது. வேளாவேளை ஆறு வாரங்கள் உபயோகித்துவந்தால் மேனி வண்ணம் மாறக் காண்பீர். பிறரும் காண்பார்.

2. வெளிப்புறத்திலிருந்து பாதுகாப்பதற்கு, சூரிய ஒளி படாதபடி தடுக்கும் சாதனம் அடங்கியுள்ளது.

நிறம் கருப்பதற்குக் காரணமான கதிரொளியை சருமத்தின் மீது படவிடாமல் தடுத்து விலக்கி, மேனியைக் காத்திடுகிறது ஃபேர் அண்ட் லவ்லி.

சிகப்பழகு தந்து, மேலும் பல வகைகளில் சிறப்பூட்டும் க்ரீம் ஃபேர் அண்ட் லவ்லி.

ஒப்பனைக்கு அடிப்படையாக தினமும் ஒரு முறை இடத்தக்கது ஃபேர் அண்ட் லவ்லி; இரு முறை உபயோகித்தாலோ நிறைவான பலனுண்டு. வேளாவேளை உபயோகித்துவாருங்கள், மங்காத சிகப்பு நிறத் தங்க மேனி மனம்போல் உங்களுக்கே.

**சிகப்பான மேனியழகுக்கு மென்மையான வழி– ஃபேர் அண்ட் லவ்லி**

தமிழ்நாட்டில் தேர்ந்தெடுத்த சில நகரங்களில் கிடைக்கும்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ்–FALOV-6-140 TM [R]

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கனர திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. பாக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழைப்பணியிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அன்னியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

ஸ்ரீ குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

Sobhagya GR 74-2-Tam.

## அத்தியாயம் 1

# சிவனடியார்

பொழுது புலர இன்னும் அரை ஜாமப் பொழுது இருக்கும். கீழ் வானத்தில் காலைப் பிறையும் விடி வெள்ளியும் அருகருகே ஒளிர்ந்து கொண்டிருந்தன. உச்சி வானத்தில் வைரங்களை வாரி இறைத்தது போல் நட்சத்திரங்கள் பிரகாசித்தன. வடக்கே ஸப்தரிஷி மண்டலம் அலங்காரக் கோலம் போட்டது போல் காட்சியளித்தது. தெற்கு மூலையில் சுவாதி நட்சத்திரம் விசேஷ சோபையுடன் தனி அரசு புரிந்தது.

அந்த மனோகரமான அதிகாலை நேரத்தில் காவேரிப் பிரவாகத்தின் 'ஹோ' என்ற சத்தத்தைத் தவிர வேறு சத்தம் ஒன்றுமே இல்லை. திடீரென்று அத்தகைய அமைதியைக் 'கலைத்துக் கொண்டு' 'டக் டக் டக்' என்ற குதிரையின் காலடிச் சத்தம் கேட்கலாயிற்று. ஆமாம்; இதோ ஒரு கம்பீரமான உயர்ந்த ஜாதிக் குதிரை காவேரி நதிக் கரைச் சாலை வழியாகக் கிழக்கேயிருந்து மேற்கு நோக்கி வருகிறது. அது விரைந்து ஓடி வரவில்லை. சாதாரண நடையில்தான் வருகிறது. அந்தக் குதிரையின் மீது ஆஜானுபாகுவான ஒரு வீரன் அமர்ந்திருக்கிறான். போதிய வெளிச்சமில்லாமையால், அவன் யார் எப்படிப்பட்டவன் என்று அறிந்து கொள்ளும்படி அங்க அடையாளங்கள் ஒன்றும் தெரியவில்லை. நெடுந்தூரம் விரைந்து ஓடிவந்த அக்குதிரையை இனி மேலும் விரட்ட வேண்டாமென்று அவ்வீரன் அதை மெதுவாக நடத்தி வந்ததாகத் தோன்றியது. அவன் தான் சேர வேண்டிய இடத்துக்குக் கிட்டத்தட்ட வந்து விட்டதாகவும் காணப்பட்டது.

அவனுக்கு வலது கைப்புறத்தில் காவேரி நதியின் பிரவாகம். இடது புறத்திலோ அடர்ந்த மரங்களும் புதர்களும் நிறைந்த காடாகத் தோன்றியது. வீரன், இடது புறத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டு வந்தான். ஓரிடத்துக்கு வந்ததும் குதிரையை இடதுபுறமாகத் திருப்பினான். குதிரையும் அந்த இடத்தில் திரும்பிப் பழக்கப்பட்டது போல் அநாயாசமாகச் செடி கொடிகள் அடர்ந்த காட்டுக்குள் புகுந்து சென்றது. கவனித்துப் பார்த்தால் அந்த இடத்தில் ஒரு குறுகிய ஒற்றையடிப் பாதை போவது தெரிய வரும்.

அந்தப் பாதை வழியாகக் குதிரை மிகவும் சிரமப்பட்டுக் கொண்டுதான் சென்றது. இரண்டு பக்கங்களிலும்



நெருங்கி வளர்ந்திருந்த புதர்களும், கொடிகளும், மேலே கவிந்திருந்த மரக் கிளைகளும் குதிரை எளிதில் போக முடியாதபடி செய்தன. குதிரை மீதிருந்த வீரனை அடிக்கடி குனிந்தும், வளைந்து கொடுத்தும், சில சமயங்களில் குதிரையின் முதுகோடு முதுகாய்ப் படுத்துக்கொண்டும் மரக் கிளைகளினால் கீழே தள்ளப்படாமல் தப்பிக்க வேண்டி இருந்தது. இத்தகைய பாதை வழியாகக் கொஞ்ச தூரம் சென்ற பிறகு திடீரென்று சிறிது இடைவெளியும், ஒரு சிறு கோயிலும் தென்பட்டன. கோயிலுக்கெதிரே பிரம்மாண்டமான யானை, குதிரை முதலிய வாகனங்கள் நின்றதைப் பார்த்தால், அது ஐயனார் கோயிலாக இருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். வேண்டுதலுக்காகப் பக்தர்கள் செய்து வைத்த அந்த மண் யானை, குதிரைகளில் சில வெகு பழமையானவை; சில புத்தம் புதியவை. அவற்றின் மீது பூசிய வர்ணம் இன்னும் புதுமை அழியாமல் இருந்தது. பலிபீடம் துவஜஸ்தம்பம் முதலியனவும் அங்கு காணப்பட்டன.

கீழ் வானம் வெளுத்துப் பல பல வென்று பொழுது விடியும் சமயத்தில் மேற்சொன்ன வீரன் குதிரையின் மீது அங்கே வந்து சேர்ந்தான். வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து அவசர அவசரமாகச் சில அதிசயமான காரியங்களைச் செய்யத் தொடங்கினான். மண் யானைகளுக்கும், மண் குதிரைகளுக்கும் மத்தியில் தான் ஏறி வந்த குதிரையை நிறுத்தினான். குதிரை மீது கட்டியிருந்த ஒரு மூட்டையை எடுத்து அவிழ்த்தான். அதற்குள் இருந்த புலித் தோல், ருத்திராட்சம், பொய் ஜடா முடி முதலியவைகளை எடுத்துத் தரித்துக் கொள்ளத் தொடங்கினான். சற்று நேரத்தில் பழைய போர்வீரன் உருவம் அடியோடு மாறி, திவ்ய தேஜஸுடன் கூடிய சிவயோகியாகத் தோற்றம் கொண்டான்.

ஆம்; வெண்ணாற்றங் கரையில் ரண களத்தில் பார்த்திபனுக்கு வரம் அளித்த சிவனடியார்தான் இவர்.

தம்முடைய பழைய உடைகளையும், ஆபரணங்களையும் ஆயுதங்களையும் மூட்டையாகக் கட்டி, உடைந்து விழுந்



திருந்த மண் யானை ஒன்றின் பின்னால் வைத்தார், அந்தச் சிவயோகி. குதிரையை ஒரு தடவை அன்புடன் தடவிக் கொடுத்தார். குதிரையும் அந்தச் சமிக்ஞையைத் தெரிந்து கொண்டது போல் மெதுவான குரலில் கனைத்தது.

பிறகு அங்கிருந்து அச்சிவனடியார் கிளம்பி ஒற்றையடிப் பாதை வழியாகத் திரும்பிச் சென்று காவேரிக் கரையை அடைந்தார். மறுபடியும் மேற்கு நோக்கி நடக்க ஆரம்பித்தார்.

ஒரு நாழிகை வழி நடந்த பிறகு சூரியன் உதயமாகும் தருணத்தில், இந்தச் சரித்திரத்தின் ஆரம்ப அத்தியாயத்தில் நாம் பார்த்திருக்கும் தோணித் துறைக்கு வந்து சேர்ந்தார். அங்கே படகோட்டி பொன்னனுடைய குடிசைக்கு அருகில் வந்து நின்று, "பொன்னா!" என்று கூப்பிட்டார்.

உள்ளிருந்து, "சாமியார் வந்திருக்கிறார், வள்ளி!" என்று குரல் கேட்டது. அடுத்த விநாடி பொன்னன் குடிசைக்கு வெளியில் வந்து சிவனடியார் காலில் விழுந்தான். அவன் பின்னோடு வள்ளியும் வந்து வணங்கினாள். பிறகு மூவரும் உள்ளே போனார்கள். வள்ளி பயபக்தியுடன் எடுத்துப் போட்ட மணையில் சிவனடியார் அமர்ந்தார். "பொன்னா! மகாராணியும் இளவரசரும் வஸந்த மாளிகையில்தானே இருக்கிறார்கள்?" என்று அவர் கேட்டார்.

"ஆம் சுவாமி! இன்னும் கொஞ்ச நாளில் நமது இளவரசரை 'மகாராஜா' என்று எல்லோரும் அழைப்பார்கள் அல்லவா?"

"ஆமாம்; எல்லாம் சரியாக நடந்தால். நீ உடனே போய் அவர்களை அழைத்துக் கொண்டு வா!" என்றார் சிவனடியார்.

"இதோ போகிறேன். வள்ளி, சுவாமியாரைக் கவனித்துக்கொள்!" என்று சொல்லிவிட்டுப் பொன்னன் வெளியேறினான். சிறிது நேரத்துக்கெல்லாம் படகு தண்ணீரில் போகும் சலசலப்புச் சத்தம் கேட்கத் தொடங்கியது.

## அத்தியாயம் 2

# வம்புக்கார வள்ளி

பொன்னன் போனதும், வள்ளி சிவனடியாருக்கு மிகுந்த சிரத்தையுடன் பணிவிடைகள் செய்யத் தொடங்கினாள். அவருடைய காலை அனுஷ்டானங்கள் முடிவடைந்ததும், அடுப்பில் சுட்டுக் கொண்டிருந்த கம்பு அடையைச் சுடச் சுடக் கொண்டு வந்து சிவனடியார் முன்பு வைத்தாள். அவர் மிக்க ருசியுடன் அடை சாப்பிட்டுக்கொண்டே வள்ளியுடன் பேச்சுக் கொடுத்தார்.

"வள்ளி! ராணி எப்படி இருக்கிறாள், தெரியுமா?" என்று கேட்டார் சிவனடியார்.

"இளவரசர் பக்கத்தில் இருக்கும் போதெல்லாம் தேவி தைரியமாகத்தான் இருக்கிறார். அவர் அப்பால் போனால் கண்ணீர் விடத் தொடங்கி விடுகிறார்" என்றாள் வள்ளி.

பிறகு, "சுவாமி! இதெல்லாம் எப்படித்தான் முடியும்? இளவரசர் நிஜமாக மகாராஜா ஆகிவிடுவாரா? அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், ராணி பொறுக்கமாட்டார்; உயிரையே விட்டுவிடுவார்" என்றாள்.

"எனக்கென்ன தெரியும், அம்மா! கடவுளுடைய சித்தம் எப்படியோ, அப்படித்தான் நடக்கும். உனக்குத் தெரிந்தவரை ஜனங்கள் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்?"

"ஜனங்கள் எல்லோரும் இளவரசர் பக்கந்தான் இருக்கிறார்கள். பல்லவ அதிகாரம் ஒழிய வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறார்கள். பார்த்திப மகாராஜாவின் வீர மரணத்தைப் பற்றித் தெரியாத குஞ்சு குழந்தைகூடக் கிடையாது. சுவாமி! அந்தச் செய்தியைத் தாங்கள்தானே ஆறு வருஷத்துக்கு முன்னால் எங்களுக்கு வந்து சொன்னீர்கள்? அதை நானும் ஓடக்காரரும் இதுவரையில் லட்சம் ஜனங்களுக்காவது சொல்லியிருப்போம்" என்றாள்.

"நானும் இன்னும் எத்தனையோ பேரிடம் சொல்லியிருக்கிறேன். இருக்கட்டும்; மாரப்ப பூபதி எப்படியிருக்கிறான்? இப்போது உன் பாட்டனிடம் ஜோஸியம் கேட்க அவன் வருவதுண்டா?" என்று கேட்டார் சிவனடியார்.

"ஆகா! அடிக்கடி வந்து கொண்டுதான் இருக்கிறான்!" என்றாள் வள்ளி. உடனே, எதையோ நினைத்துக் கொண்டவள் போல் இடி இடி என்று சிரித்தாள்.

சிவனடியார், "என்னத்தைக் கண்டு அம்மா, இப்படிச் சிரிக்கிறாய்? என்னுடைய மூஞ்சியைப் பார்த்தா?" என்றார்.

"இல்லை, சுவாமி! இல்லை. மாரப்ப பூபதியின் ஆசை இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா? காஞ்சி சக்கரவர்த்தியின் மகளை இவன் கட்டிக் கொள்ளப் போகிறானாம்! கல்யாணத்துக்கு முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி" என்றாள்.

சிவனடியாரின் முகத்தில் ஒரு விநாடி நேரம் இருண்ட மேகம் படர்ந்தது

# இலவசம்




50 கிம்.

## டர்கிஷ் பாத் லக்ஸரி சோப்

## அதிக சிக்கனமான பிஜ்

## வழங்கும் மிகச் சிறந்த வாய்ப்பு.







600 கிம் அல்லது
1.2 கிலோ
பிஜ் பேக்
வாங்கும்போது.

பிஜ்
கோத்ரெஜ்
தயாரிப்பு
பல-பயன் கொண்ட துலக்கும்
பவுடர்—அனைத்தையும்
துப்புரவாக்கும். பளிச்சிடும்
வெண்மை, பளபளக்கும்
ஒளி!

முந்துங்கள்!

சரக்குகள் இருக்கும் வரையே சலுகை!

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை கால்ஷியம்-ஸாண்டோஸ்®

ஸ்விட்சர்லாந்தில் ஸாண்டோஸ உருவாக்கியுள்ள,
உலகிலேயே தலைசிறந்த கால்ஷியம்



கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்-ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும் வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




## கால்ஷியம்-ஸாண்டோஸ்®
## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

போல் தோன்றியது. உடனே அவர் புன்னகையை வருவித்துக்கொண்டு, ''ஆமாம்; உனக்கென்ன அதில் அவ்வளவு சிரிப்பு?'' என்று கேட்டார்.

''சக்கரவர்த்தியின் மகள் எங்கே? இந்தப் பேதை மாரப்பன் எங்கே? உலகத்தில் அப்படி ஆண் பிள்ளைகளே அற்றுப் போய்விடவில்லையே, நரசிம்மபல்லவரின் மகளை இந்தக் கோழைப் பயங்காளிக்குக் கொடுப்பதற்கு?'' என்றாள் வள்ளி.

''ஆனால், உன் பாட்டன்தானே மாரப்பனை இப்படிப் பைத்தியமாக அடித்தது வள்ளி, இல்லாத பொல்லாத ஜோசியங்களையெல்லாம் சொல்லி?'' என்றார் சிவனடியார்.

''அப்படிச் சொல்லியிராவிட்டால், அந்தப் பாவி என் பிராணனை வாங்கியிருப்பான், சுவாமி! — போகட்டும்; சக்கரவர்த்தியின் குமாரி ரொம்ப அழகாமே, நிஜந்தானா? நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?'' என்று வள்ளி ஆவலுடன் கேட்டாள்.

சிவனடியார் புன்னகையுடன், ''பார்த்திருக்கிறேன் அம்மா, பார்த்திருக்கிறேன். ஆனால், அழகைப் பற்றி எனக்கு என்ன தெரியும்? நான் துறவி'' என்றார்.

''எங்கள் ராணியைவிட அழகாயிருப்பாளா? சொல்லுங்கள்.''

''உங்கள் ராணி அவ்வளவு அழகா என்ன?''

''எங்கள் ராணியா? இல்லை, இல்லை, எங்கள் ராணி அழகேயில்லை. சுத்த அவலட்சணம். உங்கள் சக்கரவர்த்தி மகள்தான் ரதி....''

''என்ன வள்ளி, இப்படிக் கோபித்துக் கொள்கிறாய்?''

''பின்னே, என்ன? எங்கள் ராணியை நீங்கள் எத்தனையோ தடவை பார்த்திருந்தும் இப்படிக் கேட்கிறீர்களே? அருள்மொழித் தேவியைப் போல் அழகானவர் இந்த ஈரேழு பதினாலு உலகிலும் கிடையாது....''

''நான்தான் சொன்னேனே, அம்மா ஆண்டியாகிய எனக்கு அழகு என்ன தெரியும், அவலட்சணந்தான் என்ன தெரியும்?''

''உங்களுக்குத் தெரியாது என்றுதான் தெரிகிறதே! ஆனால் காஞ்சி சக்கரவர்த்தியை எப்போதாவது பார்த்தால் கேளுங்கள்; அவர் சொல்லுவார். அருள்மொழித் தேவிக்கும் பார்த்திப மகாராஜாவுக்கும் கல்யாணம் ஆவதற்கு முன்னால் நடந்த செய்தி உங்களுக்குத் தெரியுமா? அருள்மொழித் தேவியின் அழகைப் பற்றி நரசிம்மவர்மர் கேள்விப்பட்டு, 'அருள்மொழியைக் கல்யாணம் செய்து கொண்டால் செய்து கொள்வேன்; இல்லாவிட்டால் தலையை மொட்டை அடித்துக் கொண்டு புத்த சந்நியாசியாகப் போய்விடுவேன்' என்று பிடிவாதம் பிடித்தார். ஆனால் அருள்மொழித் தேவிக்கு அதற்கு முன்பே பார்த்திப மகாராஜாவுடன் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. இன்னொரு புருஷனை மனத்தினால்கூட நினைக்கமாட்டேன் என்று கண்டிப்பாய்ச் சொல்லி, கடைசியில் பார்த்திப மகாராஜாவையே கல்யாணம் செய்து கொண்டார்.''

சிவனடியார் முகத்தில் மந்தகாசம் தவழ, ''ஆமாம், அம்மா! நரசிம்மவர்மர் அப்புறம் என்ன செய்தார்? தலையை மொட்டை அடித்துக் கொண்டு பௌத்த பிக்ஷு ஆகிவிட்டாரா!'' என்று கேட்டார்.

''ஆண் பிள்ளைகள் சமாசாரம் கேட்க வேண்டுமா, சுவாமி! அதிலும் ராஜாக்கள், சக்கரவர்த்திகள் என்றால் மனம் ஒரே நிலையில் நிற்குமா? அப்புறம் அவர் பாண்டிய ராஜகுமாரியைக் கல்யாணம் செய்து கொண்டார். இன்னும் எத்தனை பேரோ, யார் கண்டது?.. நான் மட்டும் ராஜகுமாரியாய்ப் பிறந்திருந்தால் எந்த ராஜாவையும் கல்யாணம் செய்து கொள்ளமாட்டேன். அரண்மனையில் பத்துச் சக்களத்திகளோடு இருப்பதைக் காட்டிலும், கூரைக் குடிசையில் ஒருத்தியாயிருப்பது மேல் இல்லையா?''

சிவனடியார் கலகலவென்று நகைத்தார். ''நீ சொல்வது நிஜந்தான், அம்மா! ஆனால் நரசிம்மவர்மன் நீ நினைப்பது போல் அவ்வளவு பொல்லாதவனல்ல....'' என்றார்.

''இருக்கட்டும், சுவாமி! அவர் நல்லவராகவே இருக்கட்டும். அவர் தான் உங்களுக்கு ரொம்ப வேண்டியவர் போலிருக்கிறதே! ஒரு காரியம் செய்யுங்களேன்? சக்கரவர்த்தியின் மகளை எங்கள் இளவரசருக்குக் கல்யாணம் செய்து வைத்துவிடுங்களேன்? சண்டை சச்சரவு எல்லாம் தீர்ந்து சமாதானம் ஆகிவிடட்டுமே!''

''நல்ல யோசனைதான், வள்ளி! ஆனால், என்னால் நடக்கக்கூடிய காரியம் அல்ல. நீ வேண்டுமானால் சக்கரவர்த்தியைப் பார்த்துச் சொல்லேன்....''

''நான் சக்கரவர்த்தியை எப்போதாவது பார்த்தால் நிச்சயமாய்ச் சொல்லத்தான் போகிறேன். எனக்கு என்ன பயம்?'' என்றாள்.

அச்சமயத்தில், படகு கரைக்கு வந்து சேர்ந்த சத்தம் கேட்டது.

வள்ளி, ''படகு வந்துவிட்டது!'' என்று சொல்லிக் கொண்டு குடிசைக்கு வெளியே வந்தாள். (தொடரும்)

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



**டாக்டர்கள் சிபாரிசு செய்வது
ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில்
பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும்
நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச்
சத்துணவு இதுவே.**
இரத்தச் செழிப்புக்கும் தெம்புக்கும் கல்லுசிதமான
அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட
உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச்
சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும்
தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும்
உடலும் விரைந்து வளர உகந்த புரதச் சத்துக்கள்;
வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—
இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே...
பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான
வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக
அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ்.
பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை
போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து
கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ்.
மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப
உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...
**அதி உன்னதமான முதல் திட உணவு
ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப்
புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—
இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**
(புத்தகம் எந்த மொழியில் எனக்குறிப்பிட்டு)
உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா
தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு:
தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.

டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான
சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத்
துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும்
போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி
உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே;
மென்றுதின்னப் பழக்குங்கள்...மேன்மையான
வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு
ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் ஜீரண
உறுப்புகளுக்கு உகந்தது.




க்ளாக்ஸோ

கணவனே கண்கண்ட தெய்வம் என்று நினைப்பவள் ராஜம்; பாரதப் பண்பை உறுதியாக நம்பும் பெண் ராதா. ஐந்து வயதில், அறியாப் பருவத்தில் தன் கணவனைக் கரம் பற்றிய பெண்ணைச் சந்திக்க நேர்ந்ததும் தன் உரிமையை விட்டுக் கொடுக்கும் பண்பைப் பெற்றவள் ஜானகி.

தம் பாத்திரத்துக்குப் பழுது ஏற்படாமல் நடிக்கும் திறமை சௌகார் ஜானகிக்கு என்றுமே உண்டு. அந்தத் திறமை பளிச்சிடுகிறது. பரதத்தில் பயிற்சி பெற்றிருக்கும் ஜெயதேவி (அறிமுகம்) நடிப்பிலும் தாம் தேர்ச்சி பெற்றவர் என்பதை நிரூபிக்கிறார்.

கமலஹாஸனும், சுஜாதாவும் சந்தித்துத் தங்கள் காதலை வளர்த்துக் கொள்ளும் காட்சி சுவையாக வளர்கிறது. அது புது மாதிரியானதும்கூட. ஆரம்பத்தில் 'மினி ஸ்கர்ட்'டில் சுஜாதாவைப் பார்த்துவிட்டு, பிறகு வேதனையும் விரக்தியும் பொங்க உறுதியான முடிவெடுக்கும் ஒரு பெண்ணரசியாகப் பார்க்கும்போது நாமும் நெகிழ்ந்து போகிறோம்.

தங்கவேலு, எம். சரோஜா இருவரும் இந்தச் சோகப் படத்துக்கு நல்லதொரு நகைச் சுவையைத் தாராளமாக வழங்கியிருக்கின்றனர். சிரித்து மகிழலாம்.

ஜெமினி கணேஷ் தமக்கு ஏற்ற பாத்திரத்தை ஏற்று நன்கு சோபிக்கிறார் - ராதாவின் அண்ணன். தாமரை மணாளனோடு சேர்ந்து படத்தை டைரக்ட் செய்திருக்கிறார். இருவரையும் பாராட்டுகிறோம்.

மணியனின் கதைக்குத் தாமரை மணாளன் சுவையாக வசனம் புனைந்திருக்கிறார்.




தலைப்பு மிகவும் பிரபலமான ஒரு பாடலின் முதல் வரி.

இடைவேளை வரையில் தொய்ந்து போய், கொழுகொம்புக்கு அலையும் கொடி போல் திரைக் கதை தவிக்கிறது. அதற்குப் பிறகு பாத்திரங்கள் உருவாகின்றன. மேடை நாடகத்தை அப்படியே படமாக்கிவிட்டபடியால் விறுவிறுப்புக் குறைவாயிருக்கிறது.

கோடீசுவரரின் ஒரு வயது ஆண் குழந்தை ஆண்டு நிறைவு தினத்திலேயே காணமற் போய்த் திரைக் கதையின் 'சஸ்பென்ஸாக'த் திகழ்கிறான். விஜயகுமார், மகேந்திரன், இன்னொரு வாலிபர் இவர்களில் யார் அந்தக் காணமற் போன கோடீசுவரக் குழந்தை? மனித மனங்களின் இழி தகைமை இதன் மூலம் நன்கு வெளிப்படுகிறது.

தன் மாப்பிள்ளை கோடீசுவரனின் ஏகபுதல்வனாயிருக்க வேண்டும் 'என்று பேராசைப் படும் பெண்மணி மனோரமா. நடிப்பு ஏ ஒன்!

குப்பை கூட்டும் தொழிலாளியாக வரும் வி. எஸ். ராகவனின் நடிப்பில் திறமையும், நல்ல அனுபவமும் பளிச்சிடுகின்றன.

ஸ்ரீப்ரியா ஒரு நல்ல காரக்டர்; மேஜரிடம் தன் உள்ளக் குமுறலை வெளிக்காட்ட முடியாமல் குமுறும்போது அவர் நடிப்பு குழப்பம் இல்லாமல் குறிப்பிட்டுப் பாராட்டும்படியாயிருக்கிறது. விஜயகுமார் தான் அந்தக் கோடீசுவரனின் காணமற் போன ஏக புதல்வர். அதோடு ஸ்ரீப்ரியாவைக் காதலித்துக் கரம் பற்றுபவரும் அவர்தான்.

# பாலூட்டி வளர்த்த கிளி



அநாதை வாலிபன் கிருஷ்ணமூர்த்தியாக வரும் மகேந்திரா தமாஷாகவும், சீரியஸாகவும் நடிக்கிறார்.

பிரபல நாடகாசிரியரான கோமல் சாமிநாதனின் நாடகமான ''ராஜ பரம்பரை''தான் ''பாலூட்டி வளர்த்த கிளி''. திரைக் கதை, வசனம், 'வியட்நாம் வீடு' சுந்தரத்தினுடையவை. டைரக்ஷன் தேவராஜ் - மோகன்.

''பாலூட்டி வளர்த்த கிளி'' காமிராவில் 'பிலிம் போட்டு எடுத்த நாடகம்!' — **காந்தன்**

# அறிமுக எழுத்தாளர்

படிப்பை இடையில் தத்தளிக்க விட்டுத் தான் இந்த ரொட்டிக் கடையில் 'நான் நுழையவேண்டியிருந்தது. ஐயாவுக்கு மெத்த வும் தள்ளாமை வந்துவிட்டது. அப்போது நான் ஒன்பதாவது படித்துக் கொண்டிருந் தேன். நானும் ஐயாவும் ரொட்டிக் கடையில் தான் வாசம் என்றாலும் வியாபாரத்தில் என்னை நுழையவிடமாட்டார். படித்து முன் னேற வேண்டும் என்பதுதான் ஐயாவின் எண்ணம். எல்லா ரொட்டிக்காரர்களைப் போல – இந்தத் தொழிலுக்கு இது ஒரு சாபம் போலும், எங்கய்யாதான் எல்லாமே. மாவைப் பிசைபவர். ரொட்டி சுடுபவர், சேல்ஸ்மேன் எல்லாமே இவர்தான். ஒன் மேன் ஷோ.

நன்றாக ஞாபகம் இருக்கிறது. கடையில் அவரால் ஒன்றுமே செய்ய முடியவில்லை.

ஐயாவுக்குப் பிறகு ரொட்டிக் கடைக்குப் பூ வியாபாரம் செய்யும் பூக்கார அம்மாவைத் தான் எனக்கு அதிகம் தெரியும். முதன் முதலில் பூக்காரம்மாவைப் பார்த்தது நன்றாக நினைவில் இருக்கிறது.

பூக்காரம்மா வீடு அடையாற்றுப் பக்கம். அடையாற்றிலிருந்து பூக்கடைக்குச் சென்று, பூ வாங்கிக் கொண்டு, இங்கு நம் பேட்டை ரொட்டிக் கடைக்கு முன் வியாபாரம்.

அன்றைக்கு ஒரு நாள் பத்தாகியும் பூக் காரம்மா யாருக்கும் பூ விற்கவில்லை. யார் யாரோ வந்து பூ கேட்கிறார்கள்.

''கொஞ்ச நேரம் ஆகுங்க.....''

''இதோ கட்டிய பூ இருக்குதே....''

''இது வேறு ஒருத்தருக்கு. அவங்களுக் காகக் காத்திருக்கிறேன்.'' வந்தவர்கள், 'ஆள்'கொட்டிவிட்டுப் போனார்கள். யார் அந்த முக்கியமான பேர்வழி என்று கவனித் துக் கொண்டிருந்தேன்.

''வாம்மா, ராஜாத்தி, உனக்காகத்தான் காத்திருக்கிறேன்.'' ஒரு பத்து வயதுப் பெண் செக்கச் செவேல் என்று, சதைப் பிடிப்பான, துருதுருத்த கண்களுடன் பூக்காரம்மாவின் முன் வந்து குனிந்து நிற்க, பூக்காரம்மா சற்று எம்பித் தன் கையாலேயே பூவைத் தலையில் செருகி முதுகைச் செல்லமாகத் தடவிவிட்ட பின், அந்தப் பெண் கொடுத்த காசை திருஷ்டி கழித்துத் தன் துணிப் பையில் போட் டுக் கொண்டே அந்தப் பெண் அங்கிருந்து



போன பிறகுதான் வியாபாரமே ஆரம்பமானது.

மறு நாள் கேட்டேன், ''யார் அந்தப் பெண் பூக்காரம்மா ?''

'' அதுவா, பெரிய இடத்துப் பெண். அவங்க அப்பா பெரிய ஆபீஸர். ஆயிரம் ரூபாய்க்கு மேலே சம்பளம். ஒரே பெண். வேறே குழந்தை குட்டி இல்லே. உங்க ஐயாவுக்குத் தெரியும். இந்தப் பாப்பா நம்ப கடையில்தான் பூ வாங்கும். தினமும் வாங்கும். வாங்காத நாளே இருக்காது. லீவு நாளாக இருந்தால்கூட இங்கு வந்துதான் பூ வாங்கும். பூன்னு அதுக்கு உயிர். அது மட்டும் அல்ல. பூவை என் கையால்தான் வைக்கணும். நாலேங்க வருஷமா இது பூ வாங்குது. இது வரல்லேன்னு என் வியாபாரம் அன்றைக்கு டல்லா இருக்கும். நான் பூ வைக்கலேன்னு அதுக்கும் என்னவோ போல் இருக்கும்..... ராசின்னு சொல்லுவாங்களே, இதன் கைதான் ராசியான கை. இது ஆரம்பித்தால் வியாபாரம் பிச்சிக்கினு போகும்.''

தினமும் காலை வேளையில் பத்துப் பன்னிரண்டு மைல்கள் தூரம் உள்ள கிராமங்களுக்கு ரொட்டியை எடுத்துச் செல்வேன். ஆனால் மனம் பொருந்தவில்லை. அதிகாலையில் புறப்பட்டால் வீடு திரும்பப் பத்து பதினொரு மணியாகிவிடுகிறதே! பாப்பாவைப் பார்க்க முடியவில்லை. அது ஒன்பதரைக்கெல்லாம் வந்து போய்விடுகிறது. அது வந்தபிறகு வியாபாரத்துக்குக் கிளம்பினால் வெய்யில் வந்து விடுகிறது. சாப்பாடு தவறிவிடுகிறது. உடம்பும் அதிகமாகக் களைத்துவிடுகிறது.

பூக்காரம்மாவைப் போல் பாப்பாவைப் பார்க்காத நாட்கள் மிகவும் டல்லாக இருக்கும். சொல்லப் போனால் இவையெல்லாமே தேவையில்லாத விசாரங்கள்தான். ஆனால் மனம் நிம்மதியற்று அலை பாய்ந்தது.

கிராமங்களுக்குப் போவதை விட்டு விட்டேன். காலையிலேயே சூடான பால் விற்றால் என்ன என்று ஆரம்பித்தேன். பாலுக்குப் பாலும் விற்கும். ரொட்டியும் விற்பனை ஆகுமில்லையா? விற்பனை ஆனதுதான். ஆனால் நிறைய மைனர்ப் பசங்க கடைக்குவர ஆரம்பிச்சானுங்க. பாப்பா பூ வாங்குகிற வேளையில் பால் சாப்பிட வருவானுங்க.

கடைசியில் என் மடியிலேயே கைவைக்க ஆரம்பிச்சானுங்க. 'பால்னா இதுதாண்டா பால். முகம்னா இதாண்டா முகம்...' பூக்காரம்மா பாப்பாவின் தலையில் பூவைத்து விட்டுக் காறி உமிழ்ந்தாள். மறுநாள் பூக்காரம்மா சொன்னாங்க: ''ரொட்டிக்காரரே, சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க. உங்க ஐயாவுக்கு இதெல்லாம் பிடிக்காது. மைனர் பசங்க நிறையப் பேர் வரானுங்க. பாப்பா கூடச் சொல்லுது. 'இந்த ரொட்டிக்காரர் ஏன் பால் கடை வச்சாரு... இண்டல் பண்றானுங்க.... பால் வியாபாரத்துக்குப் பதில் பெரிய பெரிய கம்பெனி பிஸ்கட்டுகளை வாங்கிக் கடையைப் பலப்படுத்தச் சொல்லேன்' என்று.''

மறு நாள் பூக்காரம்மா பாப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தது: 'நல்ல புள்ளாண்டான்: சொன்னேன் உடனே நிறுத்தி விட்டது. அவங்க ஐயாவும் இப்படித்தான். நான் சொன்னாத் தட்ட மாட்டாங்க. கண்ட காலிப் பசங்க இங்கு வந்து இனிமே புகை விட மாட்டானுங்க....'

பாப்பா என்னைப் பார்த்தது. பால் வடியும் முகம்னுங்களே, நூற்றுக்கு நூறு உண்மை. அந்தப் பார்வைக்காக எத்தனை கடையை வேண்டுமானாலும் நிறுத்தலாம் போலத் தோன்றியது. இளம் வயதில் எப்படி எல்லாமோ நினைத்துக் கொள்கிறோம்.

**ப**ல வருஷங்களாகப் பாப்பாவைப் பார்க்கிறேன். பள்ளிப்படிப்பு முடிந்து கல்லூரிக்கும் போகுது. அது வரும். பூக்காரம்மா தலையில் பூச்சூட்டி விடுவார்கள். சிரித்துக் கொண்டே போய் விடும். என்னை ஒரு கணம்

**போட்டிக் கதை-3**



# பூக்காரம்மா

இளம்வாணன்

பார்க்கக் கூடாதா என்று ஏங்குவேன். அந்த ஏக்கம் பூக்காரம்மாவின் பூவைப் போல் மணமாக இருக்கும். பாப்பா பெரும்பாலும் பார்க்காது. சில நாட்களில் என்னைப் பார்த்துச் சிரிப்பதுபோலக் கூடத் தோன்றும். அன்றைக்கெல்லாம் என் மனம் மகிழ்ச்சியால் துள்ளும். இளம் வயதில்லையா?

ஒரு நாள் ஞாயிற்றுக் கிழமைதான். பூ வைத்துக் கொண்டு பூக்காரம்மா மூலம் ரொட்டி வாங்கப் பாப்பா வந்தது.

''ரொட்டிக்காரரே! உன் ஆசையும் தீர்ந்தது. பாப்பா என் கடையில் மட்டும் பூ வாங்குவதாகக் குறைப்பட்டுக் கொள்வாயே, இப்போது ரொட்டி வேணுமாம் போ!...''

எனக்கு மெத்த மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் என் துரதிர்ஷ்டம் அன்றைக்குப் பார்த்துப் புதிய ரொட்டி இல்லை. பழைய ரொட்டியைக் கொடுக்கவும் மனம் இல்லை.

''அதனால் என்ன சார்... பரவாயில்லை. நான் வேறு இடத்தில் வாங்கிக் கொள்கிறேன்.''

''பூக்காரம்மா, கொஞ்சம் கடையைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் நல்ல ரொட்டியாகப் பார்த்து வாங்கி வருகிறேன்'' என்று சொல்லி அவசரம் அவசரமாகத் தூரத்துக் கடையில் ரொட்டி வாங்கி வந்து கொடுத்தேன். மற்றவர்களுக்கு வேலை செய்யும்போது, அதுவும் நமக்குப் பிடித்தமானவர்களுக்கு ஏற்படுகிற மகிழ்ச்சியின் சுகத்தை முதன் முதலில் அன்றுதான் கண்டேன்.

''உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்? ரொம்ப தேங்க்ஸுங்க.''

ஒரு நாள் பாப்பாவுக்குப் பூக்காரம்மா பூச்சூடிக் கொண்டிருக்கிறார்கள். தபால்காரர் ரிஜிஸ்டர் தபாலை என்னிடம் கொடுக்கிறார். அவசரமாக வாங்கிப் பார்க்கிறேன். விஷயம் சட்டென்று புரியவில்லை.

''ரொட்டிக்காரரே, என்ன விஷயம்? கடுதாசி இங்கிலீஷில் இருக்கிறதா? இதற்கென்ன வெட்கம்? உங்கய்யாவுக்கு இதெல்லாம் தலைகீழ்ப் பாடம். இங்கே கொடு. ரொட்டிக்காரரே, நம்ப பாப்பா படித்துச் சொல்லுது. வெண்ணெயைக் கையில் வைச்சிக்கினு நெய்க்கு அழுவானேன்?... கடிதத்தைக் கொடுத்தேன். பாப்பா சொன்னது: ''ஒன்றும் சந்தோஷமான விஷயம் இல்லை. இவர் ரொட்டி, பிஸ்கட் முதலானவைகளுக்கு ஏஜென்ஸி கேட்டிருந்தாராம். இவருக்கு பாங்க் பேலன்ஸ் இல்லையென்று ஏஜென்ஸி கொடுக்க முடியாதாம்.''

இந்த ஏஜென்ஸியை வெகுவாக நம்பியிருந்தேன். இந்த ஏஜென்ஸி மட்டும் கிடைத்திருந்தால் என் நிலைமையே மாறிவிட்டிருக்கும். இடுப்பை உடைத்து விட்டாற்போல் தோன்றியது. மேலும் பாப்பா எதிரில்தானா இந்தக் கடிதம் வந்திருக்க வேண்டும்? ஓர், இளம் பெண்ணின் எதிரில் படிப்பில்லா மூடனுக்குக் காட்டிவெளிக்கும் கொடுமையை விட வேறு தண்டனையே வேண்டாம் போல் தோன்றியது. இரண்டு மூன்று நாட்களுக்குப் பாப்பாவைப் பார்ப்பதற்கே கூச்சமாயிருந்தது.

ஒரு நாள் மெட்ரிகுலேஷன் பரீட்சையைப் பற்றிப் பாப்பாவைக் கேட்டேன். எல்லாம் பூக்காரம்மா மூலம்தான். வழி சொன்னது மட்டுமல்லாமல், அதனுடைய புத்தகங்களையெல்லாம் கூடக் கொடுத்து உதவியது.. பாப்பா பி.காம் பாஸ் செய்த வருஷம்தான் நானும் மெட்ரிகுலேஷன் முடித்தேன். பூக்காரம்மா பாப்பாவிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

''அவுங்க ஐயா என்னமா இங்கிலீஷ் பேசுவார் தெரியுமா? துரைகளே மூக்கு மேலே கை வைச்சுப்பாணுங்க... புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?...''

பாப்பா ஏதாவது சொல்லும் என்று எதிர்பார்த்தேன். எதுவுமே சொல்லவில்லை. சிரித்துக்கொண்டே போய் விட்டது. எத்தனை வருஷமா பார்க்கிறேன். இன்னும் நேரிடையாகப் பேசினது இல்லை.

எப்பவுமே பாப்பா காலையில்தான் பூ வாங்கும். அன்றைக்குச் சாயங்காலம் வந்தது.

''பூக்காரம்மா... இன்றைக்கு என்னைப் 'பெண் பார்க்க' வருகிறார்கள். உன் கையால் பூ வைத்தால்தான் திருப்தி. அதனால்தான் வந்தேன்.''

என் உடல் முழுவதும் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. பிஸ்கட் ஏஜென்ஸி கிடைக்கவில்லை என்று தெரிந்தபோது இடுப்பே உடைந்து விட்டது என்று சொன்னேனே, அது தப்புன்னு தோணுது. இப்பத்தான் இடுப்பு உடைந்து விட்டது.

''மகராசியா இரும்மா...'' என்றவாறு பூக்காரம்மா பூ வைத்து திருஷ்டி கழித்தாள்.

''ரொட்டிக்காரரே, நமக்கெல்லாம் கல்யாணச் சாப்பாடு நடக்கப் போவுது...'' பாப்பா சிரித்துக் கொண்டே போய்விட்டது.

பத்து வருஷங்களா இந்தக் கல்யாணச் சாப்பாட்டுக்காகவா காத்திருந்தேன்...?

பூக்காரம்மா ஒரு நாள் சொன்னாள்:

''ரொட்டிக்காரரே, நம்ப பாப்பாவுக்குக் கல்யாணம் ஏற்பாடாகி விட்டது. இதோ பத்திரிகை. அதுவே வந்தது. நீ அப்போ இல்லே. என்கிட்டக் கொடுத்திட்டுப் போச்சு. 'நேரில் கொடுக்கலேன்னு ரொட்டிக்காரர் கோவிச்சிக்க வேண்டாம். அவர்தான் கடையிலே இல்லையே. நான் இனிமே கல்யாணம் வரையில் அதிகம் வெளியே வரமுடியாது. கட்டாயம் அவரைக் கல்யாணத்துக்கு வந்திடச் சொல்லு...''

கொஞ்சம் கொஞ்சம் ஒட்டியிருந்த நம்பிக்கையும் போய்விட்டது. ஏன் வாழணும்னு புரியல்லே. குறைந்த பட்சம் பாப்பா வந்திருந்தபோது நான் கடையில் இருந்திருக்கக் கூடாதா? வாழ வேண்டும் என்கிற 'த்ரில்லே' போய்விட்டது. துரதிர்ஷ்டம்னு என்னன்னு புரிகிறது.

பாப்பாவின் கல்யாணத்துக்கு நான் போயிருந்தேன். பெரிய இடத்துக் கல்யாணம். எல்லாமே பெரிய மனிதர்கள். என்னை அவர்களுக்கு யார் என்று தெரியும்? நல்ல வேளையாகப் பூக்காரம்மாதான் என்னை வந்து அழைத்துப் போயிற்று. 'இதற்காகவாவது சரியான நேரத்துக்கு வந்தீங்களே...' நான் சோகமாகச் சிரித்தேன். பாப்பா கல்யாண மணையில் அழகுப் பதுமையாக அமர்ந்திருந்தது.

பூக்காரம்மா இரவெல்லாம் கண் விழித்துக் கட்டிய இரண்டு பெரிய மாலைகளை மண

மக்கள் கையில் கொடுத்து மாலை போடச் செய்து, தன் ராசியான கையால் பாப்பா வுக்குத் தலையில் பூச் சூடும்போதே, யாருமே எதிர்பாராத வண்ணம் பாப்பா நெகிழ்ச்சி யுடன் பூக்காரம்மா காலில் விழுந்து வணங் கிய அந்தக் கணத்தில் எனக்குப் பாப்பாமேல் இருந்த வருத்தமெல்லாம் பறந்து போய் விட்டது. எப்பேர்ப்பட்ட பெண் இது!

என் பங்காக இரண்டு நாட்கள் ஓயாமல் பாடுபட்டுச் செய்த நீண்ட கேக்கை மண மக்களிடம் கொடுத்து, வெள்ளிக் கத்தியால் முதல் பாதியை மாப்பிள்ளை வெட்டுமாறும், மறு பாதியைக் கல்யாணப் பெண் வெட்டு மாறும் செய்தபோது, கேக்கினுள் 'இணைந்து வாழ்வீர்' என்ற வாழ்த்துக்கள் உதிர்ந்த போது அங்கிருந்த அனைவரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். பூக்காரம்மா தனி யாகச் சொன்னாள், ''ரொட்டிக்காரரே... நீர் ஆகாசத்திலே பறக்க ஆசைப்படறது தப்பில்லே.... உங்கிட்ட சரக்கு இருக்கு...'' ஆனால் இப்பச் சொல்றது ரொட்டி இல்லையா?

**ப**த்து நாட்கள் கழித்து ஒரு நாள் மாலை பாப்பாவும் மாப்பிள்ளையும் புத்தம் புதிய மோட்டார் சைக்கிளை விட்டுப் பூக்காரம்மா முன் இறங்கினார்கள். ஜோடின்னா இதுதான் ஜோடி. காணக் கோடிக் கண்கள் வேண்டும்.

''பூக்காரம்மா இன்னைக்குத்தான் ஊரி லிருந்து வந்தோம். புது சினிமாவுக்குப் போகிறோம். உன் கையாலேயே பூவைத்து விடு...'' மாப்பிள்ளை சொன்னார்: ''நான் வைக்கக் கூடாதோ!...''

''பூக்காரம்மா கை ராசியான கை. காலம் காலமாக வைக்கிறாங்க...'' பாப்பா என்னைப் பார்ப்பது போல் தோன்றியது. பூக்காரம்மா தலையில் வைத்துக் கொண்டே ''நீ மகராசியா வாழணும்மா.... உன் பெண்களுக்குக் கூட நானே பூச்சூட்ட வேண்டும். ஐயாதான் சீக் கிரம் பெரிய மனுஷ பண்ணணும்'' என்றாள்.

அவர்கள் இருவரும் மனம் கொள்ளா மகிழ்ச்சியுடன் சிரித்துக் கொண்டே போய் விட்டார்கள். எங்கிருந்தாலும் பாப்பா மகிழ்ச்சியாக வாழ வேண்டும்.

சொந்த ஊருக்குச் சென்று சில நாட்கள் தங்கி வரலாம் என்று திடீரென்று மறுநாள் முடிவுசெய்தேன். பூக்காரம்மாவிடம் சொல்லி விட்டுச் செல்ல வேண்டும் என்று காத்திருந் தேன். அன்று ஏனோ அவர்கள் வரவில்லை. மனக் குறையாகவே ஊருக்குச் சென்றேன். ஒரு வாரத்துக்குப் பின்பு திரும்பி வந்தும் பூக்காரம்மாவைப் பார்க்க முடியவில்லை. இந்த இடைவெளி நாட்களில் பூக்காரம்மா கடை போடவில்லை என்பதறிந்து ஏதோ இனம் தெரியாத துன்பத்தினுள் குழம்பினேன். அடுத்த நாள் காலை பூக்காரம்மா பெரிய கூடையோடு என் கடை எதிரே வந்துகொண் டிருந்தாள். என்னைப் பார்த்ததும் ''ரொட் டிக்காரரே, இனிமே பூக்கடை கிடையாது. காய்கறிக் கடைதான். அதற்கு அனுமதி தரவே இல்லே....'' என்று சொல்லிக் கொண்டே 'ஓ'வென்று அழுதாள்.

''என்ன விஷயம்? ஏன் அழறீங்க?...''

''உனக்குத் தெரியாதா ரொட்டிக்காரரே! நம்ப பாப்பா... அன்னைக்குத் தலை நிறைய பூ வைச்சேனே, அதுவும் மாப்பிள்ளையும் மோட்டார் சைக்கிளில் போனாங்களே... மவுண்ட் ரோடு அருகே ஆக்ஸிடெண்டாகி அங்கேயே மாப்பிள்ளை இறந்து போனார். பாப்பா கண் கலங்கி நிற்குது ரொட்டிக் காரரே....''

நான் பொறி கலங்கி நின்றேன். என்ன சொல்வது என்றே புரியவில்லை. எப்பேர்ப் பட்ட கஷ்டம் இது?

''எந்தத் தொழிலானாலும் அதிலே ராசி வேணும் ரொட்டிக்காரரே. என் கை ராசியானது என்று நம்பித்தான் பலபேர் என்னிடம் பிரியமாகப் பூ வாங்கினார்கள். அன்னிக்குப் பாப்பாவுக்குப் பூ வைச்சேனே என்ன ஆச்சு? எமனு முடிஞ்சு போச்சு. ராசி போன பிறகு அந்தப் பூ வியாபாரம் செய்வதில் என்ன பிரயோசனம் ரொட்டிக் காரரே.... அதனாலே பூ வியாபாரத்தை விட்டு விட்டுக் காய்கறி வியாபாரம் செய்யப் போகிறேன்....''

பூக்காரம்மா என்ன சொல்றாங்கன்னு சட் டுன்னு புரியல்லே. யோசிக்க யோசிக்கப் புரிந் தது. எவ்வளவு பெரிய விஷயம் இது! பொம் பளைன்னா சாதாரணப் பொம்பளை இல்ல. 'இணைந்து வாழ்வீர்' என்று நான் கூடத்தான் என் தொழிலான ரொட்டி மூலம் பாப்பாவை வாழ்த்தினேன். அந்த இருட்டுகிற நேரத்தில் தன்னந் தனியாகக் கணவனைப் பலிகொடுத்து விட்டு, 'ஓ'வென்று கதறிப் பாப்பா அழுது கொண்டிருக்கிறதே, அந்தக் காட்சிக்குத்தான் பெயர் 'இணைந்து வாழ்வீர்' என்பதா? அந்த வாழ்த்தில் அந்தரங்க சுத்தம் இல்லையா? பூ என்றால் அதற்கு உயிர். பூ வைக்காத நாள் இல்லை. பூவோடு பிறந்து பூவோடு போக வேண்டிய புனிதப் பெண் அது. பூவும் பொட்டும் இல்லாத பாப்பாவைக் கற்பனை செய்யவே முடியவில்லை. காலம் காலமாகக் காத்திருந்த என்னைப் புரிந்து கொள்ளவில் லையே என்று நெஞ்சினுள் அழுத காலங்கள் உண்டு. ஆனால்... ஒரு போதும் இப்படி ஆகும் என்று நினைத்தது கிடையாது. அந்த நிமிடமே பூக்காரம்மாவைப் போன்று ஒரு புனிதமான மலராக மாற முடியாவிட்டாலும் மலரோடு இணைந்து மணம் வீசும் நாராக வாவது இருக்க முடிவு செய்து கொண்டேன்.

''பூக்காரம்மா, என்னிடம் நீ காய்கறி விற்க அனுமதி கேட்கத் தேவையில்லை. உனக்குப் பூ ராசி இல்லே. எனக்கு ரொட்டி ராசி இல்லே. இந்த ரொட்டித் தொழிலுக்கு நான் வேண்டாதவன். கடையை விற்றுவிட்டு எங்கோ கண் காணாத இடத்துக்குச் செல்லப் போகிறேன். இனி எப்போதுமே உங்களை யெல்லாம் பார்க்க முடியாது என்பதுதான் எனக்குள்ள குறையெல்லாம்....''

அதற்கு மேல் என்னால் பேச முடியவில்லை. தேம்பித் தேம்பி அழுதேன். என் வாழ்நாளில் எத்தனையோ பேரைச் சந்திக்கக் கூடும். ஆனால் சர்வ சாதாரண ஜீவன் என்று நினைத்திருந்த இந்தப் பூக்காரம்மாதான் எப்பேர்ப்பட்ட மனுஷி. தினம் தினம் மலரோடு பழகினால் மனமே மலராகி விடுமோ?

நான் சந்தித்த இந்த இரு மலர்களின் வாசனை சாதாரண வாசனை இல்லே. எப்போ தும் பூவோடு இருக்கிற தெய்வ வாசனை இது.



திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# தேவஸ்தான லட்டுகளை வாங்குதல்

பக்தியோடு வரும் யாத்ரீகர்களிடம் சில வஞ்சகர்கள் தாங்கள் தயார் செய்த லட்டுகளை தேவஸ்தான லட்டுகள் என்று கூறி ஏமாற்றி விற்று வருவதாகத் தேவஸ்தானத்துக்குத் தெரிய வந்திருக்கிறது.

ஆகவே யாத்ரீகர்களுக்கு தேவஸ்தானம் ஒரு விஷயம் தெரியப் படுத்த விரும்புகிறது. ஏழுமலையானுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பிரசாத லட்டுகள் கோவிலுக்குள்ளேயே தேவஸ்தானம் விற்று வருகிறது.

வெளியில் வேறு இடங்களில் விற்கப்படும் லட்டுகள் தேவஸ் தானத்தினுடைய பிரசாதமல்ல.

ஆண்டவனின் புனித பிரசாதம் வேண்டுமானால் தேவஸ்தானத் தாரால் கோவிலுக்குள்ளேயே விற்கப்படும் லட்டுகளையே வாங் குங்கள். திருமலைக்கு நீங்கள், பெருமாளை தரிசிக்கவும், அவன் அருளைப் பெறவுமே அல்லவா வருகிறீர்கள்? வந்த இடத்தில் எது சரியான இடம் எது சரியான முறை என்பது தெரிந்து கொண்டு காரியம் செய்யுங்கள். தயவுசெய்து வஞ்சகத் தரகர்களிடம் சிக்கிக் கொண்டு ஏமாந்து போகாதீர்கள்.

நிர்வாக அதிகாரி
திருமலை – திருப்பதி தேவஸ்தானம்
திருப்பதி

அமரர் கல்கி

## அத்தியாயம் 45

# கமலாவின் கல்யாணம்

திருநீர்மலையிலிருந்து கிளம்பிய நாளாகக் கல்யாணத்தின் மனம் நிலைகொள்ளாமல் தவித்தது. சதா சர்வகாலமும் இரவும் பகலும், தூக்கத்திலும் விழிப்பிலும் ஒரு முகம் அவன் மனக் கண் எதிரே தோன்றி அவனை அலைக்கழித்தது. ஒரு வேலையும் செய்யாமல் ஒன்றிலும் ஈடுபடாமல் அந்த ஒரு முகத்தை அகக் கண்ணால் பார்த்துக் கொண்டிருப்பதே காரியமாகக் காலத்தை ஓட்டினான் அவன்.

அந்த ஒரு முகம் பவானியின் அறிவொளி வீசும் அழகிய முகமாக இருந்திருந்தால் அவன் அதிசயப்பட்டிருக்க மாட்டான். ஆனால் அந்த முகம் கமலாவின் முகமாக இருந்ததுதான் அவனை வியப்பிலும் பிரமிப்பிலும் ஆழ்த்தியது. அதிலும் வேதனையும் கோபமும் தாபமும் மிக அவனைப் பார்த்து, ''சீ! நீயும் ஓர் ஆண் பிள்ளையா?'' என்று கேட்டாளே அப்போது அவள் எப்படித் தோற்றமளித்தாளோ அதே பாவத்துடன் கூடிய வதனம்!

'கமலாவின் முகம் என்னை இப்படிப் பாடாய்ப் படுத்துகிறதென்றால் அதற்கு என்ன அர்த்தம்? என்னுடைய குற்ற உணர்ச்சியின் பிரதி பலிப்பா? அவளிடம் ஏற்பட்ட கருணையா அல்லது அதற்குப் பெயர்தான் காதலா?

'அப்படியானால் பவானியைத் தான் இத்தனை நாட்களாக விரும்புவதாக எண்ணிக் கொண்டிருந்தேனே? அது தவறு? வெறும் மோகம்தானா அது. காதல் என்பது வேறு?' கல்யாணம் ஒரு முடிவுக்கு வர முடியாமல் தவித்தான்.

இரண்டு தினங்களாக நீதி மன்றத்தில் வழக்கு நடந்து வந்தபோதெல்லாம் அவன் இதயத்தில் இதே போராட்டம்தான். மூன்றாவது தினம் — ஸம்மிங் அப் நடந்த அன்று காலை அவனால் இனியும் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. கமலாவை அவள் வீட்டில் போய்ப் பார்த்து இரண்டு வார்த்தைகளாவது பேசாவிட்டால் நெஞ்சு வெடித்துவிடும் போல் இருந்தது.

ஆனால் கமலாவின் பெற்றோர் அவனிடம் முகம் கொடுத்துப் பேசாதது மட்டுமல்ல; 'எதற்கு வந்தாய்?' என்பது போல் கேட்டும் விட்டார் மாசிலாமணி. உள்ளே சமையலறையில் இருந்த! கமலாவை அவனால் பார்க்கக் கூட முடியவில்லை.

ஏமாற்றமும் வெட்கமும் அவமானமும் பொங்க அவன் அந்த வீட்டை விட்டு வெளியே வந்தான். காரில் ஏறி அதனைக் கிளப்பினான். கை போன போக்கில் கார் திரும்பிச் சென்றது. வெகு நேரத்துக்குப் பிறகு அப்புறம்தான் அவனுக்கு ஏலமலை எஸ்டேட்டுக்குப் போகும் மலைப் பாதையில் கார் ஏறிக் கொண்டிருப்பது அறிவுக்கு எட்டியது.

கமலாவும் தானும் அடிக்கடி சந்தித்து உரையாடும் பாறையைப் பவானி ஒரு சமயம் அவனுக்குச் சுட்டிக் காட்டியிருந்தாள். பவானியும் கமலாவும் தனித் தனியேயும் அங்கு வருவதுண்டாம்; சேர்ந்தும் வருவார்களாம்; தனித் தனியே வந்த பிறகு ஒருவர், மற்றவர் அங்கே ஏற்கனவே இருப்பதைப் பார்த்து மகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைவதுண்டாம்.

'அந்தப் பெண்ணை அவ்வளவு தூரம் கவரும்படி இங்கே என்னதான் இருக்கிறது, பார்த்துவிடுவோமே' என்று தீர்மானித்துக் காரை விட்டு இறங்கினான் கல்யாணம். குடை விரித்தாற்போல் நிழல் பரப்பிய சரக் கொன்றை மரம். பாறையின் மேல் பரப்பு தண்ணென்று இருந்தது. காலைச் சூரியனின் ஒளியில் கொன்றைப் பூக்கள் சிறிய சிறிய பசும்பொன் மணிகளாக ஜொலித்தன. மரத்தின் அடியில் பாறை மேல் அமர்ந்தான் கல்யாணம்.

'புத்தருக்குப் போதி மரத்தடியில் ஞானோதயம் ஏற்பட்டதாம். எனக்கு இந்தச் சரக் கொன்றை மரத்தடியில் தெளிவு பிறக்கக் கூடாதா?'

எத்தனை நேரம் அப்படி அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தானோ? சூரியன் உச்சி வானத்தை நெருங்கியபோது கிளைகளினூடே இருந்த இடைவெளியில் ஒரு கிரணம் இடம் மாறிப் புகுந்து நேராக அவன் முகத்தைத் தாக்கிக் கண்களைக் கூசவைத்தது. சட்டென்று நகர்ந்துகொண்ட அவன் கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி பத்து ஐம்பது! 'அடடா

இன்னும் பத்து நிமிஷங்களுக்குள் கோர்ட்டில் இருக்க வேண்டுமே. இல்லாதபோனால் நீதிமன்றத்தை அவமதித்தாகி விடுமே' என்று எண்ணியவனாகப் பரபரப்புடன் எழுந்து ஆடையிலிருந்து தூசி, இலைச் சருகுகளைத் தட்டினான். கைக்குட்டை, கார் சாவி எதையாவது விட்டு விட்டுப் போய்விடப் போகிறோம் என்று சுற்று முற்றும் நோக்கிய சமயம் ஓர் எழுத்து பாறையோரமாகத் தென்பட்டது. 'பாறையின் மேற்குப் பக்கம் சட்டென்று யார் கண்ணிலும் படாதபடிக்கு யாரோ என்னமோ செதுக்கியிருக்கிறார்கள். அது என்னவாக இருக்கும்?'

கல்யாணம் இரண்டடி எடுத்து வைத்துப் பாறையின் மறைவான பக்கத்தை அடைந்தான். இப்போது எழுத்துக்கள் தெளிவாகத் தெரிந்தன. இரண்டே வார்த்தைகள்தாம்: கமலாவின் கல்யாணம்.

கல்யாணத்தின் மேனி சிலிர்த்தது. அவளைத் தான் விரும்புவதாகக் கொஞ்சம் கூடக் காட்டிக் கொள்ளாத போதிலும் பவானியிடம் தன் மனம் ஈடுபட்டிருப்பதை அவளிடமிருந்து மறைக்காத போதிலும் இப்படி அழுத்தம் திருத்தமாகப் பாறையில் செதுக்குவதென்றால் அவள் எவ்வளவு உறுதியோடு இருந்திருக்க வேண்டும்? எத்தனை ஆசைகள் எத்தனை எதிர்பார்ப்புக்களைச் சுமந்துகொண்டு அவள் நாள் கணக்கில் செயல்பட்டுக் கூரிய கல்லால் அந்தப் பாறையில் ஆழச் செதுக்கியிருக்க வேண்டும்! அழியாத் தன்மை எழுத்தில் மட்டுமா இருந்தது? அதன் அர்த்தத்திலும் அல்லவா தொனிக்கிறது! 'கமலாவின் கல்யாணம்.' 'வின்' என்ற விகுதியிலே எத்தனை உறுதி!

அத்தனை உறுதியோடு இருந்தவள் இழுவனை மணக்கச் சம்மதிப்பானேன்? தற்கொலை செய்துகொள்வது பாபம் என்பது மட்டுமல்ல அதனால் கல்யாணத்துக்குக் கெட்ட பெயர் வரும் என்ற காரணமாகத்தான் இருக்கும். 'கல்யாணத்தை நம்பி மோசம் போனாள்; உயிரை விட்டாள்' என்று ஊரார் கதை பேசாமலா இருப்பார்கள்?

கல்யாணத்தைக் கரம் பிடிக்கவும் முடியாது; தற்கொலையும் சாத்தியமில்லை என்று நிச்சயமாகி விட்ட பிறகு அவள் தன் எதிர்காலப் பாதுகாப்புக்காக மட்டுமே திருமணம் புரிந்துகொள்ளச் சம்மதித்திருக்கிறாள். மனத்தால் கல்யாணத்தை வரித்த பின்னர் அவள் வேறு ஓர் இளைஞனுடன் எப்படி வாழ்க்கை நடத்த முடியும்? அதைவிட ரங்கநாத முதலியாரை மணப்பதே மேலல்லவா?

இதையெல்லாம் உத்தேசித்தே 'கமலா மனப்பூர்வமாகச் சம்மதித்துத்தான் இந்தக் கல்யாணம் நடக்கிறது' என்று பவானியும் தன்னிடம் கூறியிருக்கிறாள். தனக்குத்தான் புரியாமல் போய்விட்டது.

திருமணத்தை நிறுத்தியபோது கமலாவின் நன்றிக்குப் பாத்திரமாவதற்குப் பதில் கோபத்துக்குத் தான் உள்ளானதற்குக் காரணம் தெளிவாயிற்று கல்யாணத்துக்கு. கடந்த இரண்டு மூன்று தினங்களாகத் தன்னைச் சதா சர்வ காலமும் வட்டமிட்டு வந்த முகத்தின் பாவம் அர்த்தமாயிற்று.

ஒரு முடிவுக்கு வந்தவனாகத் திரும்பிக் காரில் ஏறினான் கல்யாணம். கார் வேகமாக நீதிமன்றத்தை நோக்கி விரைந்தது என்றாலும் காலதாமதமாகித்தான் விட்டது. அவன் நீதிபதி கோவர்த்தனன் தன்னைக் கண்டிப்பதைக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்து தன் தகப்பனார் அருகே அமர்ந்தான்.

## அத்தியாயம் 46

# பவானியின் பதில்

**ப**வானி தனது கட்சியின் வாதங்களைக் கோவையாக எடுத்துரைத்து, ''இங்குள்ள இத்தனை இளைஞர்கள் சட்டவிரோதமாகக் கமலாவின் திருமணத்தை நிறுத்துவதில் அத்தனை தீவிரம் காட்டினார்களே, அவர்களில் யாரேனும் இந்த ஏழைப் பெண்ணை மணக்க முன் வருவாரா? அப்போது சுயநலம்தான் முன் நிற்கும்; பணம் பதவி சொத்து அந்தஸ்து எல்லாம் குறுக்கிடும்'' என்று குத்தலாகப் பேசிய போது, கல்யாணத்தின் உள்ளத்தில் ஓர் உண்மை பளிச்சிட்டது.

கமலாவின் திருமணத்தைத் தான் நிறுத்தியது அவள் பேரிலுள்ள கருணையினால் மட்டுமல்ல, அவளைத் தவிர வேறு யாரும் அவளை அடைவதைத் தன்னால் சகித்துக்கொள்ள முடியாததனால்தான்! இதை அவன் மனம் புரிந்து கொண்ட மறு விநாடி அவன் ஏதோ கூற எழுந்து நின்றான். தகப்பனார் கோபால கிருஷ்ணன் அவன் சட்டையைப் பிடித்து இழுத்து உட்கார வைத்து விட்டார்.

ஆனால் பவானி விடவில்லை. ''மிஸ்டர், கல்யாணசுந்தரம்! ஏன் எழுந்து நின்று விட்டுச் சும்மா உட்காருகிறீர்? கோர்ட்டாரிடம் ஏதாவது கூற விரும்பினால் தாராளமாகச் சொல்லலாம். நீரும் பிரும்மச்சாரி தானே? கமலாவின் கல்யாணத்தைத் தடுக்க முன் வந்தீரே? இப்போது கமலாவின் கல்யாணமாவதற்கும் முன் வருவீரா?'' என்றாள்.

கல்யாணசுந்தரம் தகப்பனார் சட்டையைப் பிடித்து இழுப்பதைப் பொருட்படுத்தாமல் மறுபடியும் எழுந்து நின்றான். ''பேஷாக முன் வருவேன். முன் வைத்த காலைப் பின் வைக்கும் வழக்கம் எனக்கு இல்லை. கமலா சம்மதித்தால் அவளை மணந்து கொள்ள நான் தயார்'' என்றான்.

கோர்ட்டில் ஒரே ஆரவாரம், கரகோஷம், "ஹியர் ! ஹியர் !" என்ற ஆமோதிப்பு: 'ஹிப் ஹிப் ஹுர்ரே !" என்று இளைஞர்களின் கூப்பாடு !

மாஜிஸ்திரேட் கோவர்த்தனன் மணி அடித்தார். கோர்ட் சேவகன், "ஸைலன்ஸ் ! ஸைலன்ஸ் !" என்று தொண்டை கிழியக் கத்தினான்.

ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன் எழுந்து, "யுவர் ஆனர்! இப்போது கல்யாணம் சொன்னதைத் தாங்கள் பதிவு செய்யக் கூடாது. அதற்கும் இந்த வழக்குக்கும் சம்பந்தமில்லை. ஏதோ தெரியாத்தனமாக உளறுகிறான்" என்றார்.

"நான் ஒன்றும் உளறவில்லை" என்றான் கல்யாணம்.

"தெரிந்துதான் பேசினான். சரியாகத்தான் சொன்னான்" என்றார் ஒரு ஜூனியர் வக்கீல்.

"நீங்கள் சும்மா இருங்கள், ஊருக்கு இளைத்தவன் ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன் என்ற எண்ணம் போலிருக்கு எல்லாருக்கும்" என்று படபடத்த தன் தகப்பனார் காதில் கல்யாணம் எழுந்து நின்று ஏதோ சொன்னான்.

அவர் கோப மிகுதியில் உரத்த சத்தமாக, "என் வாயை மூடப் பார்க்கிறாயேடா, வீட்டிலே உன் அம்மாவாயை யாரடா மூடறது?" என்று கேட்டது கோர்ட்டில் எல்லார் காதிலும் விழுந்து பலத்த சிரிப்பொலியை எழுப்பியது.

மாஜிஸ்திரேட் மணி அடித்து, "பவானி! மேல் உங்கள் விசாரணை நடக்கட்டும்!" என்றார்.

ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன், "யுவர் ஆனர்! இதெல்

கமலாவின் கல்யாணம்

லாம் ஏதோ சூழ்ச்சியாகத் தோன்றுகிறது. நான் பலமாக ஆட்சேபிக்கிறேன்'' என்றார்.

பவானி மாசிலாமணி முதலியாரிடம் கலந்து பேசிவிட்டு, ''யுவர் ஆனர்! வழக்கை ஒத்தி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். இப்போது ஏற்பட்டிருக்கும் நிலைமையில் இரு கட்சியும் சமரசமாகப் போவதற்கு வழி இருக்கிறதா என்று பார்க்கலாம். மாசிலாமணி வழக்கை வாபஸ் பெறுவது கூடச் சாத்தியமாகலாம்'' என்றாள்.

வழக்கை ஒத்தி வைத்து அறிவித்துவிட்டு மாஜிஸ்திரேட் எழுந்து தம் அறைக்குச் சென்றார்.

கோர்ட் கலைந்து நீண்ட நேரமான பிறகும் கமலா பவானியின் தோளில் முகம் புதைத்து விசும்பி விசும்பி அழுது கொண்டிருந்தாள். பவானி எவ்வளவு சமாதானப்படுத்தியும் ஓயவில்லை. ''அசடே! எல்லாம் நல்லபடியாக முடிந்திருக்கிறது, பார். இன்னும் ஏன் அழுகிறாய்?'' என்றாள் பவானி.

''இது ஆனந்தக் கண்ணீர் அக்கா!'' என்று தட்டுத் தடுமாறிச் சொன்னாள் கமலா.

▫ ▫ ▫

அன்றிரவு பவானி ரங்கநாதமுதலியாரை அவர் வீட்டில் சந்தித்து நீதிமன்றத்தில் நடந்தவற்றையெல்லாம் விவரித்தாள். ''ஏதோ தவறு நேர்ந்துவிட்டது; போனதையெல்லாம் மறந்து விடுங்கள். கமலாவுக்கும் கல்யாணசுந்தரத்துக்கும் திருமணம் நடப்பது தான் பொருத்தமாய் இருக்கும். அவர்களை ஆசீர்வதியுங்கள்'' என்றாள்.

''அந்தப் பெண்ணையே கேட்டேன்; அவளே என்னை மணந்து கொள்ளச் சம்மதம் என்றாளே? ஏன் அப்படிச் சொன்னாள்? அதை விசாரித்துவிட வேண்டும்'' என்றார் ரங்கநாதன்.

''அதைப் போய் அந்தச் சிறு பெண்ணிடம் கேட்டு அவளை மேலும் குழப்பி மனத் துயருக்கு உள்ளாக்கலாமா? கல்யாணம் அவளை உதாசீனம் செய்ததால் ஏற்பட்ட ஏமாற்றம், பெற்றோரின் வற்புறுத்தல் எல்லாமாகச் சேர்ந்து அவளைச் சம்மதிக்க வைத்திருக்கும்'' என்றாள் பவானி.

''இருந்தாலும் என்னை இப்படி அவமானப்படுத்தியிருக்க வேண்டாம். போகட்டும், கொஞ்ச நாள் யாத்திரை போய்விட்டு வருகிறேன். அது வரை என் சொத்துக்களையெல்லாம் நீங்களே கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றார் ரங்கநாதன்.

அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு பவானி வீடு திரும்பியபோது மாஜிஸ்திரேட் கோவர்த்தனன் அவள் மாமா குணசேகரனுடன் தோட்டத்தில் நாற்காலிகள் போட்டு அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்.

''வாம்மா, பவானி! மாஜிஸ்திரேட் புறப்படுவதாகச் சொன்னார். நான்தான் 'சற்று இருங்கள். பவானி வந்துவிடுவாள்' என்று கூறி உட்கார்த்தி வைத்தேன்'' என்றார் குணசேகரன்.

''ரொம்ப நல்லதாய்ப் போயிற்று'' என்றாள் பவானி. ''மாசிலாமணி வழக்கை வாபஸ் பெற்றுக் கொள்வது நிச்சயம் என்பதை மாஜிஸ்திரேட்டுக்கு இப்போதே தெரிவித்துவிடுகிறேன்.''

''வழக்கில் பிரமாதமாக வாதாடினாய். கங்கிராஜுலேஷன்ஸ்'' என்றார் கோவர்த்தனன்.

''கல்யாணத்தைப் பார்த்து 'நீயும் ஒரு பிரம்மச்சாரிதானே? கமலாவின் கல்யாணமாகத் தயாரா' என்று ஒரு போடு போட்டாயே! அது எனக்குக் கூடப் பொருந்தும், நானும் ஒரு பிரம்மச்சாரிதான்!''

''அடேடே! கமலாவுக்கு இத்தனை போட்டியா? அதுவும் இத்தனை பெரிய இடங்களிலிருந்து. 'கமலா சுயம்வரம்' என்றுகூட வைத்துவிடலாம் போலிருக்கிறதே!'' என்றாள் பவானி.

''நான் அந்த அர்த்தத்தில் கூறவில்லை. கமலாவின் கல்யாணம் என்பதுதான் முடிவாகி விட்டதே. நானும் ஒரு பிரம்மச்சாரிதான் என்பதைக் கமலாவின் வக்கீலுக்கு நினைவுபடுத்துகிறேன்!'' என்றார் கோவர்த்தனன்.



## ஜோதிர்மய கிருதிகள்!

சென்னை, ஆஸ்திக சமாஜத்தில், சென்னை உயர் நீதிமன்றத்து முன்னாள் நீதிபதி திரு கே.எஸ். வெங்கடராமன் அவர்கள் ஜோதிர்மய கிருதிகள் நூலை வெளியிட்டார். முதல் பிரதியைத் திரு எஸ்.ஜி. ரத்தினம் அவர்கள் பெற்றுக் கொண்டார்.

கல்கத்தாவில் வசிக்கும் ஸ்ரீமதி இந்திரா நடேசன் தேவியின் மீதும், ஸ்ரீமந் நாராயணன் மீதும் அருட்பிரவாகமாக ஆயிரக் கணக்கான கிருதிகளைப் பொழிந்திருக்கிறார். தமக்கு அதிகம் பரிச்சயமில்லாத வடமொழியிலும், தெலுங்கிலும் இந்த அம்மையார் கீர்த்தனங்கள் இயற்றியிருப்பது திருவருள் கூட்டி வைத்த அற்புதச் செயலாகும் என்பதை முன்னாள் நீதிபதி அவர்கள் குறிப்பிட்டார்.

ஸ்ரீமதி இந்திரா நடேசனின் கீர்த்தனைகளில் ஐம்பது கீர்த்தனைகளைத் தேர்ந்தெடுத்து ஸ்வரப்படுத்தி வெளியிட்டிருக்கிறார்கள். தேவியின் அநுக்கிரகத்துக்கு விலை ஏது? அதனால் தான் விலை குறிப்பிடவில்லை போலும்!

படத்தில் லால்குடி திரு ஜெயராமன், திரு ரத்தினமய்யர் ஆகியோருடன் நடேசன் தம்பதி.

# 6000

# வாடிக்கையாளர்களின் நன்மதிப்பைப் பெற்றுள்ளோம்.

அவர்கள்தான் எங்கள்
நகை சேமிப்புத் திட்டத்தை
வெற்றி பெறச் செய்தவர்கள்.

வாடிக்கையாளர்களுக்கு ஒரு வெள்ளிக் குத்து விளக்கு அன்பளிப்பு அளித்துள்ளோம். தவிர சேமித்த தொகைக்கு, ஈடாக வெள்ளி, தங்கப் பொருட்களும் அளித்துள்ளோம்.
இன்று 6000 வெள்ளி விளக்குகள் பல இல்லங்களில் பூஜை அறையில் ஒளி வீசுகின்றன. நினைக்கப் பெருமிதம் அடைகிறோம்.
ஏனெனில் அவை எங்கள்பால் உள்ள நன்மதிப்பை சுடர்விட்டு எடுத்துக்காண்பிக்கின்றன.
ஏன் நீங்களும் இத்திட்டத்தில் சேர்ந்து பயன் பெறலாம். இரு குருப்புகள் உள்ளன.



குருப்பு–1.
மாதம் ரூ. 50 —
15 மாதங்கள் ரூ. 750

குருப்பு-2.
மாதம் ரூ. 100 —15 மாதங்கள் ரூ. 1500



## உம்மிடி சாரதி ஜுவல்லர்ஸ்

VS JEWELLERS

40, பாண்டிபஜார், மாம்பலம்,
சென்னை–600 017
போன்: 442500.

வாருங்கள் சேருங்கள். பயனடையுங்கள்
சேரும் புது அங்கத்தினர்களுக்கு
பலவித வெள்ளிப் பரிசுப்
பொருட்கள் உள்ளன.
ஒவ்வொரு சீட்டுக்கும்
ஒரு பரிசு
மட்டுமே.

ADWAVE/VSJ/477

'' அம்மா, பவானி ! நல்ல பதிலாகச் சொல்லம்மா. நான்தான் ஏற்கனவே உன்னிடம் கோவர்த்தனனின் விருப்பத்தைத் தெரியப்படுத்திப் பேசி யிருக்கிறேனே !'' என்றார் குணசேகரன்.

'' ஒருவேளை உனக்கும் கல்யாணத்துக்கும் இடையில் அன்பு வளர்ந்திருக்கிறதோ என்ற சந்தேகத்தில் நான் இது நாள் வரை ரொம்ப வற்புறுத்தாமல் இருந்தேன். ஆனால் இப்போதுதான் அவன் கமலாவைக் கல்யாணம் பண்ணிக் கொள்வது நிச்சயமாகிவிட்டதே. அதனால் இனி மேல் உன்னை நான் இலேசில் விடமாட்டேன்'' என்று கூறி விட்டுக் கோவர்த்தனன் தமது ஹாஸ்யத்தைத் தாமே ரசித்துச் சிரித்தார்.

'' யுவர் ஆனர் ! இந்தக் கேஸையும் கொஞ்சம் தள்ளி வையுங்கள்; இரண்டு வாரம் தவணை கொடுங்கள் '' என்றாள் பவானி.

''ஆல்ரைட் ! இரண்டு வாரம். சரியாகப் பதினைந்தாம் நாள் நான் மறுபடியும் இங்கே வருவேன். நல்ல பதிலை எதிர்பார்த்து வருவேன் '' என்றார் கோவர்த்தனன்.

அவர் போன பிறகு மாமா குணசேகரன் பவானியைப் பார்த்து, ''நீ இப்படி அடம் பிடிப்பது நன்றாயில்லை. உன்னால் அந்த மனுஷன் வாழ்க்கையே பாழாகிக் கொண்டிருக்கிறது. கோர்ட்டைவிட்டு வீட்டுக்குத் திரும்பினால் சதா உன் படத்தைப் பார்த்துக் கொண்டு பித்துப் பிடித்தவர் போல் உட்கார்ந்திருக்கிறாராம். ஏக்கத்தை மறக்கக் குடியிலும் இறங்கி விட்டாராம். அவரிடம் வேலை பார்க்கும் சமையல்காரன் மணி நேற்று வந்து ஒரு குரல் அழுதுவிட்டுப் போனான். பாவம், அவன் கோவர்த்தனன் பேரில் உயிரையே வைத்திருக்கிறான். அவரைக் காப்பாற்றிக் கரையேற்றும்படி மன்றாடினான். நீ கோவர்த்தனனை ஏற்க மறுத்துவிட்டால் அவர் எதிர்காலமே கெட்டுக் குட்டிச்சுவராகிவிடும்போலிருக்கிறது'' என்றார்.

'' அவருடைய எதிர்காலத்தில் அத்தனை அக்கறை காட்டுகிறீர்களே, என் எதிர்காலம் பாழானால் பாதகமில்லையாக்கும்'' என்றாள் பவானி.

''அப்படி நான் என்னுவேனா, பவானி. கோவர்த்தனனை உனக்குப் பிடிக்கவில்லையென்றால் உன் மனத்தில் வேறு யாரையாவது வரித்திருக்கிறாயா? அதையாவது சொல். கல்கத்தாவில் இருக்கும் போது ஏதாவது நடந்ததா ? உன் பெற்றோர் சம்மதம் கிடைக்கவில்லையா ? விவரமாகச் சொன்னால் உனக்காக அவர்களிடம் நான் வாதாடிப் பார்க்கிறேன்.''

'' என் காதலருக்கு வேறு ஒருத்தியுடன் திருமணமாகி விட்டது, மாமா ! நாட்டுப் பற்று என்னும் நங்கையை மணந்து கொண்டு நாலு வருஷங்கள் மாமியார் வீடே கதி என்று இருக்கிறார். விடுதலை பெற்று வர இன்னும் இரண்டு ஆண்டுகள் பாக்கியிருக்கின்றன'' என்று கூறிக் குணசேகரனைத் திகைப்பு கலந்த மௌனத்தில் ஆழ்த்தி விட்டுத் தன் அறைக்குச் சென்றாள் பவானி.

(தொடரும்)

---

"என் இரு குழந்தைகளுக்கு உன்னால் தாயாக முடியும்; உன் ஒரு குழந்தைக்கு என்னால் தந்தையாக முடியாதா?''

துணிந்து புனைந்த சித்திரம் என்று உண்மையிலேயே பெருமைப் படக்கூடிய அளவுக்குப் பிரச்னைகளைக் கிளறிவிடும் படம் அக்னி ரேகா.

பெயருக்கேற்பத் தீக்கோட்டில் நடை பயிலும் படக் கதையின் சுருக்கம் சுருக்கமாக இதுதான்:

இரண்டு குழந்தைகளை விட்டுச் சுரேஷின் மனைவி கண்ணை மூடி விடுகிறாள். அக்குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லித் தர வரும் மீரா ஒரு கன்னித் தாய். அவள் ஒப்புதல் சிறிதும் இன்றிப் பலாத்காரச் செயல் நிகழ்கிறது. அவளை ஒரு குழந்தைக்குத் தாயாக்கிப் பழி தீர்த்துக் கொள்ளுகிறது. என்றாலும் தன் இரண்டு குழந்தைகளையும் அன்பால் பிணித்துக்கொண்ட அவளைத் தன் வாழ்க்கையோடு பிணைத்துக்கொள்ள முயலுகிறான் சுரேஷ். ஊர்வசி சாரதாவும் பரத் சஞ்ஜீவ் குமாரும் உணர்ச்சி மிகுந்த இந்தப் பாத்திரப் படைப்புக்களை ஏற்றுப் படக் கதைக்கு உயிர் ஊட்டுகின்றனர். குழந்தைகளுக்குப் பாட்டியாக வரும் துர்க்கா கோட்டேயும் உயிர்ப்புடன் நடித்துச் சிறப்பு கூட்டுகிறார்.

சொல்லி வைத்தாற்போலக் குழந்தைகள் நடிக்கச் சொல்லி வைத்தாற்போலச் சில நிகழ்ச்சிகள் நடந்தாலும் வலுவான பிரச்னையினால் படம் பிழைக்கிறது. ரிஷிகேஷ் முக்கர்ஜியின் எடிட்டிங்கும் மகேஷ் கௌலின் டைரக்ஷனும் புஷ்டிகரமான டானிக்கென வலு ஊட்டி நடை பயில வைக்கின்றன. ரா. வீ

அக்னி-ரேகா



போஷாக்குத்
துள்ளி எழ
அதிக கோகோ

## புதிய
# போர்ன்விடா




மற்றெந்த மால்ட் செறிந்த ஆரோக்கிய உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் என்றுமே அதிக கோகோ சேர்க்கப்பட்டுள்ளது. இப்பொழுதோ, போர்ன்விடாவில் முன்னைக் காட்டிலும் அதிக போஷாக்கும் அதிக இன்சுவையும் அளித்திட, அதிக கோகோ அடங்கியுள்ளது.

போர்ன்விடாவிலுள்ள கோகோவில், இரத்த அமைப்புக்கு அவசியமான இரும்புச் சத்து நிறைந்துள்ளது மற்றும் வைட்டமின்கள் 'பி' மற்றும் 'டி'யும் கால்ஷியம், பாஸ்பரஸ்.

காட்பரிஸ்
# போர்ன்விடா

சிறப்பான
சுவையூட்ட
அதிக கோகோ

# முன்னேக்காட்டிலும் அதிக கோகோவுடன்.

சோடியம், பொட்டாஷியம் போன்ற விலை மதிப்பற்ற கனிஜ உப்புகளும் அடங்கியுள்ளன. அவை மட்டுமா? போஷாக்கு தரும் நற்பண்புகள் அடங்கிய, மால்ட், பால் மற்றும் சர்க்கரை போர்ன்விடாவில் மண்டிக் கிடக்கின்றன. ஒரு கப் சூடான பாலில் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா கலந்து, இன்சுவையுள்ள போஷாக்கைப் பருகுங்கள்.

உங்கள் செல்வங்களுக்கு தினமும் இருவேளை போர்ன்விடா வழங்குங்கள். அவர்களுடைய உடல் சீராக வளரத் தேவையான, அசாதாரண போஷாக்கைத் தந்து உதவுகிறது அது. ஏன், அவர்களுடன் ஈடுகொடுக்க, உங்களுக்கும் அது தேவை.

## 75 பைசா மிச்சம்

போர்ன்விடா 450 கிராம்
ரீ::பில் பேக் வாங்கி,
75 பைசா மிச்சப்படுத்துங்-
கள்! இந்தப் பேக்கைத்
திறந்தவுடனே, வழக்கமான
போர்ன்விடா டின்னில்
அதை நிரப்பி, புதுமை
கெடாமல் பாதுகாருங்கள்.




**அதிகப்படியான கோகோ, அதிகப்படியான வலிமை, அதிகப்படியான இன்சுவை**

OBM 6714 TM

# பாடுவோம் பாப் மியூசிக்!

கதை: தமயந்தி/சாருகேசி 11

சித்திரம்: ராஜு.
















ஐயோ, நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன்! அந்த அரைப் பைத்தியத்துடன் ஆயுள் பூராவும்... ஓம காட்!
சரி, இந்த முழுப் பைத்தியத்துடன் ஆயுள் முழுதும் இருக்க என்ன வழி? யோசித்துப்பார்.


உங்களுக்கு எப்படி இந்த விஷயமெல்லாம் தெரிந்தது? நீங்களும் பாலாஜியைப் பார்த்தீர்களா? சூல்ஸம் லிங்கத்தைப் பார்த்தீர்களா?
நான் கோவில் சிவலிங்கத்தைக் கூடப் பார்க்கவில்லை. விஷயமே என் வீடு தேடி வந்துவிட்டது, ஒரு சான்ஸ் அபத்தில்.


ஆஹா! எஸ். எஸ். லிங்கம் வீட்டிலே நீங்கள் பாப் மியூசிக் பாடப் போகிறீர்களா? என்ன விசேஷம்?
லிங்கம் வீட்டில் அல்ல. லிங்கம் தொழிலக ஊழியர் ஆண்டு விழா. அதில் பாப் மியூசிக் திலகம் அருண் பாடப் போகிறார்.


அவர் பாதி கச்சேரியில் வந்து கலாட்டா பண்ணினால்?
இது தொழிலாளர் ஏற்பாடு. அவர் வீட்டில் வேணுமானால் இந்துஸ்தானியில் படா படா ஆசாமிகள் கச்சேரி வைத்து பாலாஜியே தபலா வாசிக்கட்டும்.


அப்பா ஏதோ காரியமாகத்தான் அவர்களைக் கைக்குள் போட்டுக் கொள்ளப் பார்க்கிறார்.
நான்தான் சொன்னேனே! அவருக்குப் பெரிய தொழிலதிபர் சம்பந்தியாக வேண்டும் என்று ஆசை. அது போல லிங்கத்துக்கும் உங்க அப்பாவால் ஏதோ ஆகணும். பிரபல சபா காரியதரிசி ஆச்சே?


ஆங்... சபா தேர்தல் வரது. தலைமைப் பதவிக்கு முயற்சி பண்றாரோ லிங்கம்?
கரெக்ட். அதுவாகத்தான் இருக்கணும்! அவர் தோற்றுப் போக நம் மனமார்ந்த வாழ்த்துக்கள்!

தொடரும்

# புது உலகம் கண்டேன்!



## 11. கலை வளமும் தொழில் வளமும்

சுமார் 312,700 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு உள்ள போலந்து நாட்டின் மொத்த மக்கள் தொகை 35 மில்லியன். மக்கள் தொகை விகிதாசாரத்தை வைத்துப் பார்த்தால் ஒரு சதுர கிலோ மீட்டருக்கு 108 பேர் விதம் வசிக்கிறார்கள். இதில் 54 சதவித மக்களுக்கு மேல், நகரங்களில் வசிக்கிறார்கள்.





சோவியத் யூனியனையும் செக்கோஸ்லோவேக்கியாவையும், கிழக்கு ஜெர்மனியையும் எல்லைப்புற நாடுகளாகக் கொண்ட போலந்தின் இயற்கை அழகை ஒருமுறை பார்த்தவர்களால்கூட மறக்கவே முடியாது. அழகிய காடுகளும், மரக் கூட்டங்களும், வனப்பு மிக்க ஏரிகளும், மலைகளும் நிறைந்த நாடு அது. நாட்டின் மொத்த நிலப் பரப்பில் இருபத்தேழு சதவிகிதம் காடுகள். போலந்து முழுவதுமாக மொத்தம் 9,300 ஏரிகள் இருக்கின்றன. அவற்றில் மிக மிகப் பரப்பளவுள்ளது ஸ்நியார்ட்வி ஏரி. (Sniardury Lake) அது 113.8 சது. கி. மீ. பரப்பளவு கொண்டது. மிக மிக ஆழமானது ஹன்ஸா ஏரி. (Honcza Lake) மிக மிக நீண்ட இந்த ஏரியின் ஆழம் 108 மீட்டர். 1047 கி. மீ. தொலைவு ஓடும் விஸ்டுலா நதியும் 854 கி.மீ. தொலைவு ஓடும் ஆத்ரா நதியும் நாட்டின் மிக பெரிய ஆறுகளாகும். நாட்டின் மிகப் பெரிய நகரும் தலைநகருமாகிய வார்ஸாவில் கிட்டத்தட்ட 15 லட்சம் மக்கள் வசிக்கிறார்கள். வார்ஸாவின் சுற்றுப்புறத்தில் உள்ள உப நகரங்களின் (Satellite Towns) மக்கள் தொகையையும் சேர்த்தால் 22 லட்சம் ஆகி விடும். நாட்டின் சமூக, கலாசார, விஞ்ஞான கேந்திரமாய் விளங்கும் பெருமை வார்ஸாவுக்கே உண்டு.

அகாடெமி ஆஃப் சயின்ஸ், போலிஷ் ரைட்டர்ஸ் யூனியன் ஐரோப்பாவிலேயே பழமை வாய்ந்த தியேட்டர்கள் – இசை அரங்குகள் இவை யெல்லாம் வார்ஸா நகரிலேயே இருக்கின்றன. பத்து மில்லியன் போலிஷ் மக்களுக்கு மேல் அந்நிய நாடுகளில் வசிப்பதால் வார்ஸா நகருக்கு நிறைந்த சர்வ தேசத் தொடர்பு இருக்கிறது. அமெரிக்காவில் மட்டும் ஐந்து மில்லியன் போலிஷ் மக்களுக்கு மேல் குடியேறி வசிக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் சிகாகோ நகரில் வசிக்கிறார்கள். அடுத்து பிரிட்டன் முதலிய நாடுகளிலும் அவர்கள் எண்ணிக்கை அதிகம்.

- வார்ஸா அருகில் ஸெட்டிலைட் டவுன்.
- போலந்தின் கண்ணாடித் தொழில்திறனுக்கு எடுத்துக் காட்டு.
- போஸ்னான் நகரில் பொம்மலாட்டக் காட்சி.

தொழில் வளம் நிறைந்த நாடாகிய போலந்து உலகில் உள்ள தொழில் வள நாடுகளில் பத்துக்கும் பன்னிரண்டுக்கும் இடைப்பட்ட வரிசையில் இடம் பெறுகிறது. ஐரோப்பிய நாடுகளில் நாடகக் கலைக்கு முன்னோடியாக விளங்கும் நாடுகளில் போலந்தும் ஒன்று. 75 பெரிய நாடக அரங்குகளும், 25 பொம்மலாட்ட (Puppet Theatres) அரங்குகளும் இப்போது போலந்தில் சிறப்பாக இயங்குகின்றன. சினிமாப் படங்களிலும் சோதனைத் தயாரிப்புக்கள் அதிகம் தயாராகின்றன. போஸ்னான் நகரம் பரம்பரையாகவே பொம்மலாட்டக் கலைக்குப் பெயர்பெற்றது. அந்நகரில் உள்ள 'மார்ஸினெக்' பொம்மலாட்ட அரங்கு (Marcinek Puppet Theatre) போலந்தில் உள்ள பொம்மலாட்டத் தியேட்டர்களிலேயே சிறப்பானதாகக் கருதப்படுகிறது. குழந்தைகள், இளைஞர்கள், முதியவர்கள் ஆகியோரில் எத்தரத்தினருக்கான பொம்மலாட்டக் கதையானாலும் அதை 'மார்ஸினெக் அரங்கில் சிறப்பாக நிகழ்த்துகிறார்கள். நாடக அரங்கு தவிர கவிதை நாடக அரங்குகள் (Poetry Theatres) என்று வேறு தனியாக இருக்கின்றன.

இலக்கியம் புத்தகப் பதிப்புத் துறைக்கு வந்தால் அதிலும் போலந்துக்கு என்று தனித்த இடம் இருக்கிறது. இலக்கியத் துறையில் போலந்து இதுவரை இரண்டு நோபல் பரிசுகளைப் பெற்றுள்ளது. அச்சமைப்பிலும், கட்டுமானத்திலும் போலிஷ் புத்தகங்கள் உயர்ந்த தரத்தனவாய் இருக்கின்றன. பெரிய பெரிய 'என்ஸைக்ளோபீடியா'க்களைப் பதிப்பிக்கிற வார்ஸாவில் உள்ள ஒரு பதிப்பகத்துக்குச் சென்றிருந்தேன். பதிப்பு வேலை பல்வேறு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருந்தது. இலக்கிய நூல்களைப் பதிப்பிக்கும் பதிப்பகங்களில் கூட அச்சிடுதல், நிர்வாகம், ஓவியம் பொருள் முதலீடு, விற்பனை என்று பல தனித் துறைகள் தனித் தனிப் பொறுப்புக்களில் இயங்கியே ஒரு பதிப்பகமாக இருந்தது. ஒரு பொறுப்பிலேயே அனைத்தையும் சேர்த்துக் குழப்பியடித்து இயக்குவதில்லை.

நா. பார்த்தசாரதி

சமூக நலத் துறையில் போலந்தில் மட்டும் ஒரு தனி அம்சம் இருந்தது. தொழிலாளிகளுக்கு அரசாங்க உதவித் தொகையில் விடுமுறைக்கால ஓய்வு நாட்களைக் கழிக்க (State Subsidized holidays) ஏற்பாடு செய்கிறார்கள். இதற்கென்று 'தொழிலாளர் ஓய்வு நாட்கள் நிதி' என்று தனியே ஒரு நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

இனிமேல் பார்க்க மீதமிருப்பது போலந்தின் தொழில் வளம். இத்தலைப்பில் முதலிடம் பெறுவது சுரங்கத் தொழில். பின்னும் வேறு சில சிறிய தொழில்களும் எண்ணிக்கையில் வரும் என்றாலும் சுரங்கத் தொழில்தான் போலந்தின் முக்கியமான வளம். கண்ணாடிப் படிமங்கள் (cut glasses) ஒளிப் பட்டைக் கண்ணாடிகள் (crystals) ஆகியவை அடுத்துக் குறிப்பிடப் படவேண்டியவை. அவற்றிலும் போலந்துக்கு ஓரளவு நற்பெயர் கிடைத்திருக்கிறது.

நிலக்கரி, செம்பு, ஸல்பர் கல்லுப்பு, பொட்டாஸியம் உப்பு, கட்டிடத்துக்கான பாறைக் கல் துத்தநாகம் ஆகியவை போலந்தின் இயற்கை வளங்கள். இரும்புத் தாதுக்களும் எண்ணெய் வளமும், இயற்கை எரி வாயுவும் மிகக் குறைந்த அளவு இருந்தன.

போலந்து நாட்டின் மொத்த நிலக்கரி இருப்பு எண்பதினாயிரம் மில்லியன் டன்கள் என்று கணக்கிடப் பட்டிருக்கிறது. அரபு நாடுகள் என்று கூறியவுடன் 'எண்ணெய் வளம் — பெட்ரோல்' என்ற சொற்கள் எப்படி உடனே நினைவு வருமோ அப்படியே போலந்து என்று சொல்லியவுடன் நினைவுக்கு வரும் பதம் 'நிலக்கரி' என்பதுதான்.

அரபு நாடுகள் எப்படி எண்ணெய் வளத்தைக் கொண்டு செழிப்பாக இருக்கின்றனவோ அதேபோல் தனது நிலக்கரி இருப்பில் அதிகப்படியான பத்து சதவிகிதத்தைப் பெற



■ சுரங்க வேலை நடக்கிறது.

■ சுரங்கத் தொழிலில் கம்ப்யூட்டர் கண்ட்ரோல்.





# கலைவாணரின் கருணை

காஞ்சிபுரத்தில் திரு அண்ணாதுரைக்கு எதிராகத் தேர்தலில் நின்றார் ஒரு டாக்டர். திரு என். எஸ். கே. அண்ணாதுரைக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்ய வந்தார். ஆனால், தேர்தல் கூட்டத்திலோ அவர் டாக்டரைச் சிலாகித்தே பல நிமிஷ நேரம் பேசினார். ஒருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. 'என்ன என். எஸ். கே. எதிராளியைப் பாராட்டிக் கொண்டிருக்கிறாரே!' என்று வியந்தனர். கடைசியில் என். எஸ். கே. சொன்னார்: "இவ்வளவு சிறந்த ஒரு டாக்டரை, ஏழை பங்காளரை, இரவு பகல் எந்நேரமும் வைத்தியம் புரியத் தயாரா விருப்பவரைக் காஞ்சிபுரத்தை விட்டு அனுப்பிவிடாமல் உங்களுடனேயே வைத்துக் கொள்ளுங்கள். அரசியலே காரியமாக இருக்கும் அண்ணா அவர்களைச் சென்னைக்குச் சட்டசபை பிரதிநிதியாக அனுப்பி வையுங்கள். - திரு எஸ். எஸ். ராஜேந்திரன்

என். எஸ். கே. கடும் நோயால் பாதிக்கப்பட்டு மருத்துவமனையில் இருந்த சமயம் நண்பர்கள் ஏராளமான ஆரஞ்சுகளை அன்பளிப்பாகக் கொண்டு வந்து மலையாகக் குவித்தனர். என். எஸ். கே அத்தனையையும் பிழியச் சொன்னார்.

"உங்களுக்கு ஒன்றிரண்டு பிழிந்தால் போதுமே?" என்றார் உதவியாளர்.

"எனக்கில்லை அப்பனே! இந்த ஆஸ்பத்திரியில் தரையில் படுத்திருக்கிறார்கள் பார்; அவர்களுக்கெல்லாம் ஜூஸ் கொடுத்துவிட்டு வா!"

பல பெரிய பாத்திரங்களில் பழரசத்தைப் பிழிந்து எடுத்துக் கொண்டு புறப்பட்ட உதவியாளருக்கு மறுபடியும் சந்தேகம் வந்தது. "அது என்ன, தரையில் படுத்திருப்போருக்கு மட்டும் தரச்சொல்கிறீர்கள்? கட்டிலில் படுத்திருப்போர் என்ன பாவம் செய்தார்கள்?"

"நானும் கவனித்து வருகிறேன், கட்டிலில் படுத்திருப்போரை யாராவது பார்க்க வருகிறார்கள். ஏதாவது கொண்டு வருகிறார்கள். தரையில் படுத்திருப்போரைக் காணத்தான் யாரும் வருவதில்லை. அவர்களை என் சார்பில் நீ போய்ப் பார்த்து ஜூஸ் கொடுத்துவிட்டு வா!" என்றார் கலைவாணர். — டைரக்டர் சீனிவாசன் (கலைவாணர் நிலையம் வெ. நாராயணன் ஏற்பாடு செய்த நினைவு நாள் விழாவில்)

நாடுகளுக்கு விற்பதன் மூலமே மற்றெல்லா இறக்குமதிகளையும் சரிசெய்து கொள்ள முடியும் என்று பொருளாதார வல்லுநர்கள், போலந்தைப் பற்றிக் கணக்கிட்டுச் சொல்லியிருக்கிறார்கள். தன்னுடைய நிலக்கரி முதலிய சுரங்க வளத்தைப் பெருக்குவதற்கும் விரிவுபடுத்துவதற்கும், சுரங்கத் தொழிலாளிகளின் ஒத்துழைப்பைத் தவிர விஞ்ஞானிகள், தொழில் நுணுக்க வல்லுநர்களின் ஆலோசனைகளும், பொறியியல் நிபுணர்களின் திட்டங்களும் அவ்வப்போது கிடைக்கும்படி செய்து கொள்வதில் இந்தச் சிறிய நாடு மிகவும் கவனமாக இருக்கிறது.

முன்னேற்றம் அடைந்த பல நாடுகள் படிப்படியாக நிலக்கரியின் உபயோகத்தைக் குறைத்துக் கொண்டு விட்டன என்றாலும் போலந்து நம்பிக்கை இழந்துவிடவில்லை. பிரிட்டன், டென்மார்க், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகள் நிலக்கரி உபயோகத்தைக் குறைத்துக் கொண்டு அதற்குப் பதில் பயன்படுத்துவதில் அதைவிடச் சிரமம் குறைந்த குரூட் ஆயில் முதலிய கனரக எண்ணெய் வகைகளைப் பயன்படுத்தத் தொடங்கி விட்டன. அதன் காரணமாக பெட்ரோ கெமிகல் வளர்ச்சியிலும், ஸிந்தெடிக்ஃபைபர்–வளர்ச்சியிலும் போலந்து தன் கவனத்தைச் செலுத்தத் தொடங்கியிருக்கிறது. இதற்கெனத் தொழிற் கூடங்களும், ரிஃபைனரிகளும் விரைந்து அமைக்கப்பட்டு வருகின்றன. குரூட் இறக்குமதியும் இதை ஒட்டி அதிகரிக்கப்பட்டுள்ளது.

ஒருபுறம் பெட்ரோ கெமிகல் தொழிலில் கவனம் செலுத்தினாலும் தனது தங்கச் சுரங்கங்களைப் போன்ற நிலக்கரிச் சுரங்கங்களை நவீனமாக்கும் முயற்சியையும் விரிவுபடுத்தும் முயற்சியையும் போலந்து விட்டுவிடவில்லை. கடந்த முப்பது ஆண்டுகளில் மிகப் பெரிய 14 புதிய சுரங்கங்கள் தொடக்க வேலைகளில் நிறைவு பெற்றுக் கரி எடுக்கும் வேலைக்கு ஆயத்தமாகத் தொழிலாளிகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. ஏற்கனவே புழக்கத்தில் இருந்து வரும் நாற்பது சுரங்கங்கள் விஸ்தரிக்கப் பட்டிருக்கின்றன. சுரங்கத் தொழிலை நவீனமாக்குவதற்கான கருவிகளைத் தொழில் நுணுக்க வல்லுநர்கள் நாடெங்கும் தொடர்ந்து கண்டுபிடித்து அறிமுகப்படுத்திக்கொண்டே இருக்கிறார்கள்.

நிலக்கரி சப்ளை — மின்சார சப்ளை — எல்லாம் அப்படிச் சப்ளை செய்யப்படும் தொழில்களின் உற்பத்தி — புதிய உற்பத்திக்கான வசதிகள் எல்லாவற்றோடும் பிணைக்கப்பட்டுள்ளன. அதனால் நிலக்கரி, மின்சார சப்ளை பெறுகிற ஒரு பெரிய தொழிற்சாலை விரைந்து பலவற்றைச் சாதித்துக் கொடுக்க வேண்டிய உற்பத்திக் கட்டாயம் இருக்கிறது.

ஆராய்ச்சி அனுபவங்கள் மூலம் சுரங்கங்களில் வேலை செய்வதில் தொழிலாளர்களுக்கு நேர முடிகிற அபாயங்கள் படிப்படியாகக் குறைக்கப்பட்டுள்ளன.

நாட்டின் சில பகுதிகளில் சுமார் 1000 மீட்டர்கள், 1200 மீட்டர்கள் ஆழத்தில் தான் நிலக்கரி இருக்கிறது. இன்னும் சில பகுதிகளில் மேலாக நிலக்கரி இருந்தாலும் அந்த இடங்களில் தரைப் பகுதியில் பெரிய நகரங்கள் அமைந்து வளர்ச்சி பெற்றிருப்பதால் நகரங்களுக்கோ அதில் வசிப்பவர்களுக்கோ இடையூறு இல்லாத முறையில் சுரங்க வேலை நடைபெற வேண்டியிருக்கிறது.

இன்னும் சில இடங்களில் சுரங்கங்கள் திடீரென்று கீழ் நோக்கி அழுந்தி அல்லது அமிழ்ந்து விடக்கூடிய அபாயமும் உண்டு. இவற்றை எல்லாம் மனத்திற் கொண்டு சுரங்கங்கள் ஆழமாக இருக்கும் இடங்களில் உள்ளே வேலை செய்பவர்களின் பாதுகாப்புக்கும் சுரங்கங்கள் மேலாக இருக்குமிடங்களில் தரைப் பரப்பில் வசிப்பவர்களின் பாதுகாப்புக்கும் உத்தரவாதம் அளிக்கும் வகையில் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

1976க்கும் 80க்கும் இடைப்பட்ட ஐந்தாண்டுகளில் உலக நிலக்கரி உற்பத்தியில் நாலாவது இடத்தைப் பிடிக்கும் முயற்சியில் போலந்து ஈடுபட்டுள்ளது. 1975ல் 162 மில்லியன் டன்கள் நிலக்கரி உற்பத்தி செய்ததிலிருந்து 1980ல் 200 மில்லியனுக்கு வளர்ச்சித் திட்டம் போடப்பட்டிருக்கிறது. பழுப்பு நிலக்கரியிலிருந்து (நமது நெய்வேலி போல) மட்டும் 132 ஆயிரம் மில்லியன் கிலோவாட் மின்சாரம் தயாராகிறது.

போலந்தில் நிலக்கரியைத் தவிர ஆண்டு தோறும் 14.5 மில்லியன் டன் செம்பும் (copper) 4 மில்லியன் டன் ஸல்பரும் சுரங்கத் தொழில் தரும் வளங்களாகக் கிடைக்கின்றன. வளமான கச்சாப் பொருள்களையும் தாதுப் பொருள்களையும் போலந்து பெற்றிருப்பதுதான் அதன் தொழில் விஞ்ஞான வளர்ச்சிக்கு முக்கிய காரணம். சுரங்கத் தொழிலைக் கம்ப்யூட்டர் மூலம் நவீனமாக்கும் செயல்கள் தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

பல சுரங்கங்களில் கம்ப்யூட்டர் மூலம் (Computer System of controlling) நவீன சாதனங்களை இயக்கும் முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டுள்ளது. இப்படி நவீனப்படுத்துவதால் சுரங்கத் தொழிலின் செலவுகள் பயங்கரமாக அதிகரித்தாலும் கூட அதன் பின்னரும் லாபம் கிடைப்பதாகக் கணக்கிட்டுச் சொல்லுகிறார்கள்.

நுண்கலைப் பிரிவில் வரும் கண்ணாடிப் பண்டங்கள் (glassware) தயாரிப்பதிலும் போலந்துக்குச் சிறப்பான கலையழகு முத்திரை உண்டு. கண்ணாடிப் பண்டங்கள் உருவமைப்புக்கென்றே (glass designing) தனியான நுண்கலைப் பள்ளிகள், கல்லூரிகள் எல்லாம் உள்ளன. போலந்தின் கண்ணாடிப் பண்டத் தயாரிப்புக்களுக்கு உலகக் கண்ணாடிச் சந்தையில் புகழ் மிக்க பெயர் உண்டு.

அன்று தரைக்கு மேலே இருந்த போலந்தை நாஜிகள் அழித்தார்கள். பகீரதப் பிரயத்தனக்காரர்களான போலிஷ் மக்கள் தரைக்கு அடியிலே இருந்து நிலக்கரி முதலியவற்றைத் தேடி எடுத்துப் புதிய போலந்தின் பொருளாதார மாளிகையைக் குறைவறக் கட்டி முடித்துவிட்டு இன்று நிமிர்ந்து நிற்கிறார்கள். நிலக்கரி தவிர, கனரக இயந்திரங்கள், கப்பல்கள், மெஷின் டூல்ஸ் முதலியவற்றை ஏற்றுமதி செய்யும் போலந்தின் அந்நிய நாட்டு ஏற்றுமதி இறக்குமதி வரவு செலவு (turn over) 1974ன் கணக்குப்படி 19,181.1 மில்லியன் டாலர்கள் மதிப்பீட்டில் வருகிறது. சோவியத் யூனியனுக்கு அடுத்தபடி இந்தியா போலந்துடன் பல கோடி ரூபாய்க்கு வர்த்தகம் செய்கிறது என்றால் அந்நாட்டின் பெருமையைச் சொல்ல வேறு வார்த்தைகள் அவசியமில்லை.

(தொடரும்)



# சேரமான் காதலி

கண்ணதாசன்

அத்தியாயம் 4

## மலைத் தேன்

அழகே அழகைப் பார்த்துப் பிரமிக்கிறது. கலையே கலையைக் கண்டு கனிந்து நிற்கிறது. சிலையே சிலையைப் பார்த்துத் திகைத்து விடுகிறது.

சலீமா பூஜியாளு சந்திப்பின் இரகசியம் அவ்வளவுதான்.

அராபியாவில் சலீமா பார்க்காத அழகல்ல; பூத ஜாதியில் பூஜியாளு காணாத கலையல்ல.

அராபிய திராக்ஷையும், இஸ்ரவேலின் மாணிக்கமும் போட்டி போட்டுக் கொண்டு ஒன்றையொன்று பார்த்ததற்கு விசேஷக் காரணம் எதுவுமில்லை.

''சேர மன்னன் காதலிக்கும் பூதப் பெண் இவள்தானு?'' என்ற சிந்தனையிலேயே சலீமா பூஜியாளுவைப் பார்த்தாள்.

இந்துக் கோயிலின் அருகே ஒரு மகம்மதியச் சிலை எப்படி வந்தது என்ற ஆச்சரியத்துடனேயே பூஜியாளு, சலீமாவைப் பார்த்தாள்.

இருவரும் தத்தம் நிலைக்குத் திரும்பியபோது சலீமா ஒன்றையும் கவனியாதவள் போல் ஜெபுன்னிஸாவோடு நடக்கத் தொடங்கினாள்.

பூஜியாளு ரதத்தை விட்டு இறங்கிப் பகவதி அம்மன் கோவிலுக்குள் சென்றாள்.

ஏற்கெனவே கோவிலுக்கு ஆள் அனுப்பி ஏற்பாடுகள் செய்திருந்தார், மூன்றும் சேரமான்.

ஆகவே பூஜியாளுவை வரவேற்கவே அங்கு சிலர் காத்திருந்தார்கள்.

தேங்காய் பழங்களைப் பூஜை செய்பவரிடம் கொடுத்து விட்டுக் கண்களை மூடி, கரங்களைக் கூப்பி பூத மொழியில் பாடத் தொடங்கினாள் பூஜியாளு.

'தாயே,

மலைத் தோட்டத்து வெண் புறா ஒன்று உன் மாளிகைக்குள் அடைக்கலம் புகுந்திருக்கிறது.

பெத்லகாமிலிருந்து உனக்கு இந்தக் காணிக்கை வந்திருக்கிறது.

சாலமனுடைய அரண்மனையில் எரிய வேண்டிய இந்த விளக்கு, சேரமானின் அரண்மனையில் எரியப் போகிறது.

ஜாதி மதங்களையும், தேச பேதங்களையும் கடந்து எங்களைச் சந்திக்க வைத்தது உன் கருணையே.

இஸ்ரவேலின் காதல் தேவதையைப் போல் இல்லாமல் நீ ஒரு ருத்ர தேவதையாக இருக்கிறாய்.

என் பழக்க வழக்கங்களில் உனக்கு மாறுபாடாக ஏதேனும் கண்டால், இது சுவீகாரக் குழந்தையின் அறியாமை என்று மன்னித்துவிடு.

என் குழந்தை ஒருசேரக் குழந்தையாகவே பிறக்கப் போகிறது.

அது ஒரு பெண் குழந்தையானால் அதன் பெயர் உன் பெயரே.

புதிய வாழ்க்கையைக் கண்டு ஆணவம் அடைந்து விடாமலும், பழைய வாழ்க்கையை மறந்து விடாமலும் இருக்க எனக்கு அருள்புரி.

—பாடி முடிந்து அவள் கண்களைத் திறந்தபோது பழத் தட்டு அவள் முன்னால் நீட்டப்பட்டது. அதைக் கையில் வாங்கிக் கொண்டு அவள் ரதத்தில் ஏறும்போது 'கேரளநாட்டு ஆடை அணிமணிகள்தான் இந்த பூதப் பெண்ணுக்கு எவ்வளவு அழகாக இருக்கின்றன' என்று யாரோ சொன்னது அவள் காதில் விழுந்தது.

அவளது ரதம் தனி மாளிகைக்குள் நுழைந்தபோது மகாராணிகளுக்கு மட்டுமே கிடைக்கக் கூடிய வரவேற்பு அவளுக்குக் கிடைத்தது.

சில தோழிப் பெண்கள் மாளிகையின் ஒவ்வொரு பகுதியையும் அவளுக்குக் காட்டிக் கொண்டு வந்தனர்.

அனைத்தையும் பார்த்துப் பிரமித்த யூஜியானு அழகான ஓர் அறையின் அருகே வந்தபோது, தோழிப் பெண்கள் அவளை உள்ளே தள்ளிவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டனர்.

அங்கே ''இனிமேல்தான் வருவார்'' என்று எண்ணியிருந்த அவளது அன்பு நாயகன் மூன்றும் சேரமான் இடது முழங்கையைத் தலையணையில் ஊன்றிய வாறு மஞ்சத்தில் சாய்ந்திருந்தார்.

அடிமேல் அடியெடுத்து அவன் அருகிலே வந்தாள் யூஜியானு.

மஞ்சத்தில் சாய்ந்திருந்த மன்னன் அப்படியே எழுந்திருந்து அவள் நெஞ்சத்தில் சாய்ந்து கொண்டார்.



''நீங்கள் வந்து வெகுநேரம் ஆகிவிட்டதா? நான் சற்றுத் தாமதித்து விட்டேன்'' என்றாள் அவள்.

''காக்க வைப்பது பெண்களுக்கு அழகு. காத்துக் கொண்டிருப்பது ஆண்களுக்கு அழகு'' என்றார் மன்னவர்.

அவள் தன் கைமலரால் அவனது முகமலரை வருடிக் கொடுத்தாள்.

புதிய சூழ்நிலையில் இருவரும் மெய் மறந்திருந்தனர்.

கதகதப்பான அந்த உறவில் காலம் போவதே தெரியாமல் இருந்தனர்.

வசந்த காலத்துப் புஷ்ப மரங்களுக்கு நடுவே வளைய வளைய விளையாடும் பறவைகள் போல் அவர்கள் விளையாடினார்கள்.

ஒரு பெண்ணுக்குக் கிடைக்க வேண்டிய சகல சுகங்களையும் பெற்றுவிட்ட பாக்கியசாலியாக யூஜியானு விளங்கினாள்.

நள்ளிரவு.

களைப்புற்றிருந்த நான்கு கண்களும் மெல்ல மூடத் தொடங்கின.

அந்த நேரத்தில் மாளிகையில் ஒரு பரபரப்பு.

அரண்மனைத் தனநாயகன் ஒருவன் ''அரசரை உடனே பார்க்க வேண்டும்'' என்று காவல்களைக் கடந்து வேகமாக வந்து கொண்டிருந்தான்.

கதவைத் தட்ட அவனுக்கு அச்சம். வெளியில் இருந்தவாறே, ''மகாராஜா!'' என்று குரல் கொடுத்தான்.

ஆனந்தத் தூக்கமும் அரசியல் விழிப்புமாகப் படுத்திருந்த சேரமான் உடனே எழுந்து கதவைத் திறந்தார்.

''திருவிதாங்கோட்டிலிருந்து செய்தி வந்திருக்கிறது. மன்னவர் மார்த்தாண்ட வர்மரை இனம் தெரியாத ஒருவனின் விஷ அம்பு தாக்கி விட்டதாம். மரணப் படுக்கையில் இருக்கும் அவர் தங்களைக் காண விரும்புகிறாராம். திருவிதாங்கோடு அல்லோலகல்லோலப் பட்டுக் கிடக்கிறதாம். மகாராணி பத்மாவதி தேவியாரும், சகோதரிகளும் துடிதுடித்துப் போயிருக்கிறார்கள். தம்பிரான் சுவாமிகள் புறப்பட்டுப் போய்விட்டார்'' என்றான் அவன்.

உடனே மேலாடையை எடுத்து அணிந்து கொண்ட சேரமான், யூஜியானுவிடம் கூட ஒரு வார்த்தை சொல்லாமல் புறப்பட்டார்.

''இந்த நேரத்திலா இந்தச் செய்தி வரவேண்டும்'' என்று அவர் கலங்கினார்,

''இது என்ன துர்ச்சகுனமோ?'' என்று அவள் கலங்கினாள்.

அரண்மனையில் ரதங்கள் தயாராக நின்றன. கண்கள் குளமாகப் பத்மாவதியும் தாவளிச் சகோதரிகளும் நின்றார்கள்.

''இது யார் செய்த வேலையாக இருக்கும்?'' என்பதே சேரமானின் சிந்தனையாக இருந்தது.

நாராயண நம்பூதிரி முன்கூட்டியே திருவிதாங்கோட்டுக்கு வந்து விட்டார்.

மார்த்தாண்ட வர்மனின் உடல் பஞ்சணையில் சாய்ந்திருந்தது. இடது விலாப்புறத்தில் பாய்ந்திருந்த விஷ

அம்பு எடுக்கப்பட்டு அங்கு மஞ்சள் வைத்துக் கட்டப்பட்டிருந்தது.

கண்களைத் திறந்து யாரையும் காண முடியாதவாறு இருந்தான் மார்த்தாண்ட வர்மன்.

அவன் காலடியில் கண்ணீர் சிந்திய படி அமர்ந்திருந்தாள் மெல்லிளங்கோதை.

''இது யார் செய்த வேலை? எப்படி நடந்தது?'' என்று கேட்டுக் கொண்டிருந்தார் நாராயண நம்பூதிரி.

அங்கு தளபதியாக இருந்த அங்கதன் பதிலிறுத்தான்.

''புதிய கோட்டையை நானும் மன்னரும் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தோம். கோட்டையின் கீழ்த் திசைக் கொத்தளத்தின் மீது மன்னர் ஏறி நின்றார். மலை உச்சியிலிருந்து பறந்து வந்த ஓர் அம்பு அவரது விலாப்புறத்தில் பாய்ந்தது'' என்றான் அவன்.

''எய்தவனை நீ பார்த்தாயா?'' என்று கேட்டார் நாராயண நம்பூதிரி.

''பார்த்தேன். அவன் மலையவேள் குடியினன் போல் காட்சி யளித்தான். வேணாட்டில் சொந்தம் கொண்டாடும் மலையமான் குடியினரின் ஒரு பகுதியினர் இன்னும் உதயகிரி மலையில் மறைந்திருப்பது தங்களுக்குத் தெரிந்ததுதான். எய்தவன் அவர்கள் தலைவனாகவே இருக்க வேண்டும்'' என்றான் அங்கதன்.

''அவனைப் பிடிப்பதற்கு முயற்சி செய்தீர்களா?'' என்று கேட்டார் நாராயண நம்பூதிரி.

''நமது மலையேறும் படையினரும், காடு வெட்டிகளும் போயிருக்கிறார்கள். எப்படியும் அவனைப் பிடித்துக் கொண்டு வருவார்கள்'' என்றான் அங்கதன்.

உடனே நாராயண நம்பூதிரி மருத்துவர் பக்கம் திரும்பி, ''உயிருக்கு ஆபத்தில்லையே?'' என்றார்.

''இல்லை. அம்பு இடது புறத்து விலா எலும்பிலேயே பாய்ந்திருக்கிறது. அது விரைவிலேயே எடுக்கப்பட்டு விஷத்துக்கு மாற்று மருந்தும் போடப்பட்டு விட்டது. அதிர்ச்சியால் வந்த மயக்கம் மட்டுமே நீடிக்கிறது. ஆபத்து ஒன்றும் இல்லை'' என்றார் மருத்துவர்.

அப்போது திருவஞ்சைக் களத்தில் இருந்து புறப்பட்ட ரதங்கள் வரிசையாக வந்து நின்றன.

தாவிக் குதித்து ஓடி வந்தார் சேரமான். பின்னாலேயே தள்ளாடி நடந்து வந்தாள் பத்மாவதி.

கையறு நிலையில் காட்சி தந்தார்கள் தாவளிச் சகோதரிகள்.

படுக்கையில் மார்த்தாண்ட வர்மனைக் கண்டதும் ''தம்பி!'' என்று அலறினாள் பத்மாவதி.

மெல்லிளங் கோதையைக் கட்டிப் பிடித்துக் கொண்டார்கள் தாவளிச் சகோதரிகள்.

நடந்த நிகழ்ச்சிகள் சேரமானுக்கு விரிவாகச் சொல்லப்பட்டன.

அப்போது பொழுது விடிந்து விட்டது.

மலை நாட்டுத் தலைவனைப் பிடிக்கப் போன படைகள் இன்னும் வந்து சேரவில்லை.

அந்த அவமானத்தைப் பொறுத்துக் கொள்ளச் சேரமானால் முடியவில்லை.

''எத்தனை நாடுகளை வென்ற படைகள்! ஒரு மலைநாட்டுத் தலைவனைப் பிடிக்க முடியவில்லையே!'' என்று குமுறினார் அவர்.

தன்னோடு ஒரு நூறு வீரர்களை மட்டுமே அழைத்துக் கொண்டு மலையேறும்போது, காலில் கட்டுகிற சங்கிலி, கட்டி இழுத்து ஏறுகிற வடக்கயிறு, எந்த இடத்தில் விழுந்தாலும் அந்த இடத்தைப் பற்றிக் கொள்கிற பாதாளக் கரண்டி அனைத்தையும் எடுத்துக்கொண்டு மலையேறப் புறப்பட்டார்.

''நீங்கள் எதற்கு? படைகள் செல்லட்டுமே'' என்று தடுத்தார் நாராயண நம்பூதிரி.

''இல்லை. அவன் யார், அவன் சக்தி என்ன என்பதை நான் பார்த்தாகவேண்



அட்டைப்பட விளக்கம்

## பாரில் அறங்கள்




**மங்கை யராகப் பிறப்பதற்கே - நல்ல**
**மாதவம் செய்திட வேண்டுமம்மா - அவர்**
**பங்கயக் கைநலம் கண்டல்லவோ - இந்தப்**
**பாரில் அறங்கள் வளருதம்மா !**

-கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

டும்'' என்று சொல்லிப் புறப்பட்டார் சேரமான்.

உதயகிரிமலை மிகவும் உயரமானதல்ல. ஆனல் செங்குத்தானது. மேலே சென்றுவிட்டால் இருபது கல் சுற்றளவுக்குச் சமவெளி உண்டு. ஆங்காங்கு மரங்களின் மீது அமைக்கப்பட்ட பரண் வீடுகள் உண்டு. தேன், பலா, வாழை மூன்றும் நிறையக் கிடைக்கும் இடம் அது.

வேணாட்டை ஆண்டு வந்த மலையவேள் குடியினரின், நாகரிகம் அடையாத ஒரு கூட்டத்தினர் அங்கே இருந்து வந்தனர்.

திங்கள் ஒரு முறை அவர்கள் மலையில் இருந்து இறங்கி வந்து திருவிதாங்கோட்டுச் சந்தையில் தேனும் பலாவும் விற்று, தேவைப்பட்ட பொருள்களை வாங்கிச் செல்வார்கள்.

முதுகிலே அந்தப் பொருள்களைக் கட்டிக்கொண்டு மலையேறும் திறமை அவர்களுக்கு இருந்தது போல் மற்றவர்களுக்கு இல்லை.

வேணாடு கேரளத்தில் சேர்க்கப்பட்டதிலிருந்து அவர்கள் வெறுப்புற்றிருந்தார்கள்.

திருவிதாங்கோடு தனி நாடு ஆனதும் தங்கள் கைவரிசையைக் காட்டத் தொடங்கினர்கள்.

அதன் முதல் கட்டம்தான் மார்த்தாண்ட வர்மன் மீது எய்யப்பட்ட அம்பு.

சேரமான் செங்குத்தான மலையில் ஏறிப் பயிற்சி பெற்றவர் அல்லவென்றாலும், உணர்ச்சிப் பெருக்கில் ஏறத் தொடங்கினர். படை வீரர்களும் மட மடவென்று ஏறத் தொடங்கினர்கள்.

அவர்கள் ஏற ஏற ஒவ்வொரு பாறை இடுக்கிலும் ஒரு சேர நாட்டு வீரன் அம்பு பட்டு மாண்டு கிடப்பதைப் பார்த்தார்கள்.

பாதி தூரம் ஏறியதும் மலை உச்சியில் வில்லும் அம்புமாக வரிசையாக நின்ற மலை ஜாதியினர் அவர்கள் கண்களுக்குத் தெரிந்தார்கள்.

முன்னெச்சரிக்கையாக அவர்கள் கவசம் அணிந்திருந்ததால் மலையிலிருந்து பறந்து வந்த அம்புகள் அவர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை.

எதிர்த்து அம்பு விட்டுக் கொண்டே அவர்கள் மலைஉச்சியை நெருங்கினர்கள்.

எனினும் வீரர்கள் நூறு பேரில் சுமார் நாற்பது பேர் மடிந்தார்கள். வீரர்களோடு வீரனுக அடையாளம் தெரியாமல் சென்ற சேரமான் முதலில் சில வீரர்களோடு மலை உச்சியை அடைந்து விட்டார்.

அங்கே சேரமானுக்கும் மலை ஜாதியினருக்கும் பலமான யுத்தம் நடந்தது. ஆனல் இறுதியில் ஆயிரம் பேருக்கு மேல் இருந்த மலை ஜாதியினரிடம் சேரமான் தோற்றர். அவரையும், மிஞ்சிய இருபது படை வீரர்களையும் கயிற்றல் பிணைத்து மரங்களில் கட்டினர்கள்.

மலை ஜாதியினர் தலைவன் — அஞ்சலவேள் ஒரு மன்னனைப் போலவே கம்பீரமாக அவர் முன் தோன்றினன்.

மலைஜாதி ஆண்களும் பெண்களும், அவர்களைச் சுற்றிச் சுற்றி ஆடத் தொடங்கினர்கள்.

பெரிய காட்டு எருமை ஒன்றை அறுத்து வாட்டத் தொடங்கினர்கள்.

அப்போது பறவைகளின் இறகுகளால் அழகான ஆடை தரித்து முத்து, பவளம், சங்கு ஆகியவற்றைக் கழுத்தில் அணிந்து காதிலே நான்கு வளையங்களைத் தொங்க விட்டுப் பளபளக்கும் முகத்தோடு சேரமானின் எதிரே தோன்றினள் மலை ஜாதித் தலைவனின் மகள் தரங்கிணி.

கட்டப்பட்டிருந்த சேரமானின் அருகிலே வந்து பார்த்தாள். அவள் கண்களைப் பார்க்கவே சேரமானுக்குப் பயம் உண்டாயிற்று.

மத்தளம் போன்ற வாத்தியங்கள் முழங்க அந்த மலை ஜாதிக் கலைமகள் அபிநயம் பிடிக்கத் தொடங்கினள்.

(தொடரும்)

# தலைநகரில் ராஜாஜி சிலை

## (24-8-76 முதல் 7-9-76 வரை நிதி வழங்கியவர் பட்டியல்)

| | | |
|---|---|---|
| 23-8-76 வரை வசூல் | 1549 | 00 |
| இமயன், பெங்களூர் | 5 | 00 |
| எம். ஆர். ஸ்ரீநிவாஸன், கொரட்டூர் | 5 | 00 |
| ஏ. ராமசாமி, கிண்டி ராஜ்பவன் | 51 | 00 |
| ராஜ்ஸ்ரீ கோபாலன், ரூர்க்கேலா | 15 | 00 |
| பி. சுப்பிரமணியம், சென்னை | 21 | 00 |
| ரமண சேவக், புதுதில்லி | 10 | 00 |
| ஏ. என். வெங்கடராமன், புதுதில்லி | 30 | 00 |
| எஸ். டி. ஐயங்கார், திக்விஜய்கிராம் | 10 | 00 |
| சி. ஏ. நாராயண், பம்பாய் | 201 | 00 |
| டி. என். அகோரம் அய்யர், மாயூரம் | 10 | 00 |
| ஏ. ராம்சுவாமி, சேலம் | 5 | 00 |
| ஜே. ரகுவீரசிம்ஹா, தும்கூர் | 10 | 00 |
| கே. எஸ். அர்ஜுனன், புதுதில்லி | 5 | 00 |
| ஏ. எஸ். நரசிம்மன், ஆர்க்காடு | 5 | 00 |
| ஸ்ரீமதி ஜானகி மஹாதேவன், நந்தனம் எக்ஸ்டென்ஷன் | 5 | 00 |
| டி. எம். நரசிம்மன், ஹைதராபாத் | 5 | 00 |
| நேஷனல் கல்சரல் அஸோஸியேஷன், திருச்சி | 101 | 00 |
| ஜு. ராஜகோபால், புரசை | 10 | 00 |
| ஜி. பார்த்தசாரதி கோனார், பாலக்குறிச்சி | 10 | 00 |
| வி. வரதராமநாதன், மன்னார்குடி | 5 | 00 |
| சி. லக்ஷ்மி, பொன்மலை | 5 | 00 |
| எஸ். வெங்கடேச்வரன், செங்கல்பட்டு | 10 | 00 |
| ஸ்ரீமதி கங்காராஜன், பம்பாய் | 15 | 00 |
| எல். ஆர். கணேசன், மதுரை | 5 | 00 |
| கே. கேசவன் நம்பூதிரி, நெய்வேலி | 10 | 00 |
| இசையன்பன் முத்து, மதுரை | 5 | 00 |
| பி. பெப்பின் ஃபெர்னாண்டோ, பாளையங்கோட்டை | 25 | 00 |
| வி. ராமகிருஷ்ணன், மேலை மாம்பலம் | 10 | 00 |
| டி. சுந்தரராஜன், ருபைதிஹா | 20 | 00 |
| ஜே. ராமகிருஷ்ணன், நாகபுரி | 5 | 00 |
| டி. ஸ்ரீநிவாஸன், சண்டிகர் | 5 | 00 |
| ஆர். நரசிம்மன், நந்தனம் எக்ஸ்டென்ஷன் | 101 | 00 |
| கே. ராமமூர்த்தி, கருங்கல்பாளையம் | 5 | 00 |
| பி. கோபாலகிருஷ்ணபாலிகா, நங்கைநல்லூர் | 25 | 00 |
| எஸ். லக்ஷ்மிதேவி, கோயமுத்தூர் | 5 | 00 |
| சாந்தாராமமூர்த்தி, .. | 5 | 00 |
| வஸந்தா நரசிம்மன் .. | 5 | 00 |
| என். சுதாகர், .. | 5 | 00 |
| என். ஆர். வேணுகோபால ஐயங்கார், திருச்சி | 11 | 00 |
| என். ஆர். வி. ராமன், .. | 11 | 00 |
| என். ஆர். தேசிகம்ஐயங்கார் .. | 11 | 00 |
| நாராயணஸ்வாமி .. | 11 | 00 |
| எஸ். எம். ரங்கசாமி, செங்காப்பள்ளி | 5 | 00 |
| மிஸ் டி. ரமா, சென்னை | 5 | 00 |
| பிரேமா ராஜகோபால், சேலம் | 10 | 00 |
| பி. டி. ரங்கநாதன், பெங்களூர் | 5 | 00 |
| மன்னை எஸ். ராமசந்திரன், மடிப்பாக்கம் | 5 | 00 |
| டி. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்ரீரங்கம் | 5 | 00 |
| திருச்செங்கோடு காந்தி ஆசிரமம், அமரர் வி. எஸ். தியாகராஜன் நினைவாக | 10 | 00 |
| ஏ. கிருஷ்ணன், தஞ்சாவூர் | 10 | 00 |
| என். முருகேசன், அரியலூர் | 10 | 00 |
| வி. சி. ராகவசிம்மன், குரோம்பேட்டை | 10 | 00 |
| ஆர். தியாகராஜன், கல்கி ஏஜண்ட், பரம்பிக்குளம் | 5 | 00 |
| மொத்தம் | 2458 | 00 |

அந்தச் செய்தி எங்கிருந்து எப்படித் தோன்றியது? அதன் எதிரொலி உலகெங்கும் கிரகங்கள் எங்கும் மனிதன்... மனிதனுடன் பேசும்போதெல்லாம் அவன் சிந்தனையின் பெரும்பான்மையை அடைத்துக் கொண்டு அந்த ஆகஸ்டு மாதத்தை உயிர்களின் சரித்திரத்தில் ஒரு தழும்பாக, வடுவாக மாற்றியது. ஒரு சர்வதேச, சர்வ அம்ச ஆவேசமாக ஜுரமாக விரவிப் பரவிய அந்தச் செய்தி ஒரு தினத்தில் ஏறக்குறைய ஒரே சமயத்தில் செய்தித் தாள்களில், ரேடியோ டெலிவிஷன் போன்ற மனிதத் தொடர்புச் சாதனங்களில்—ஏன், மழை காலப் பச்சை போலத் திடீர் என்று தோன்றிய சுவரொட்டிகளில் எங்கும் தோன்றியது.

செய்தி இதுதான்.

தருணம் வந்துவிட்டது. இன்னும் பதினைந்து தினங்கள் கழித்த வெள்ளிக்கிழமையில் சூரிய உதயத்தின்போது நான் உங்கள் முன் தோன்றுகிறேன். நாடு நகரங்களில் இருப்பவர்கள் ஒரு பொது இடத்தில் கூடி இருக்கவும் என்னை எதிர்நோக்கி.

—கடவுள்






செய்தித் தாள்களில் முன் பக்கத்தில் கட்டை மீட்டுப் பெரிய எழுத்துக்களில் நட்ட நடுவே—டெலிவிஷன் ஸ்டீரியோவிஷன் சாதனங்களில் நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சி நிறுத்தப்பட்டுத் திரைகளை ஆக்கிரமித்தது; ரேடியோ சங்கீதங்கள் வெட்டுண்டு அமைதியான குரல் ஒன்று இந்தச் செய்தியைப் பேசியது.

சுவரொட்டிகள் தோன்றின.... யாரோ கொடுத்தார்கள் என்று கத்தை கத்தையாகச் சிறிய பையன்கள் நோட்டீஸ் துண்டுகளை வீதிகளில் வாரி இறைத்தார்கள்.... எல்லாவற்றிலும் ஒரே வாசகம்.... ஒரே கடவுள்.... உலக அரசின் உள்துறை அமைப்பின் தலைமைச் செயலகத்தில் அவசரக் கூட்டத்தில் ஒரு பிரும்மாண்டமான அறையில் அவர்கள் கூடியிருந்தார்கள்.

ஆத்மாவின் தலை கலைந்திருந்தது. அவர் தூக்கமின்மை கண்களில் தெரிந்தது. அவர் இரத்த அழுத்தம் எகிறிப் போயிருந்தது.

''என்னய்யா, கண்டு பிடித்தீர்களா? எங்கிருந்து இந்தச் செய்தி கிளம்பியிருக்கிறது என்று.....''

எதிரே முட்டை வடிவ மேஜையைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்த அத்தனை முகங்களிலும் ஈயாடவில்லை.

''செய்தி வந்து இரண்டு நாட்களாகிறது. இன்னும் கண்டு பிடிக்கவில்லையா! யார் இந்த விஷமம் செய்தது என்று? என்னய்யா, டாக்டர் பரஞ்சோதி... அத்தனை விஞ்ஞான சாதனங்கள் வைத்திருக்கிறீர்! உலகின் தொடர்புச் சாதனங்கள் அனைத்தையும் பரிபாலனம் செய்து வருபவரிடம். இது எப்படிப் புகுந்தது? உங்கள் முட்டாள் கம்ப்யூட்டர்கள் என்ன சொல்கின்றன.... உங்களுக்கெல்லாம் தண்டத்துக்குச் சம்பளம் கொடுக்கிறதா?...''

''நீங்கள் உணர்ச்சி வசப்படாமல் இருந்தால் நான் பேசுகிறேன்'' என்றார் டாக்டர் பரஞ்.

''ஆல்ரைட்! உணர்ச்சியே இல்லை எனக்கு! நீங்கள் சொல்லப் போவதைக் கூர்ந்து கவனமாக, நிதானமாகக் கேட்கிறேன். மௌனமாகக் குறுக்கிடாமல் கேட்கிறேன் சொல்லு'' என்று மேஜையைக் குத்தினார்.

எல்லோரும் எச்சிலை விழுங்கிக் கொண்டார்கள்.

''ஆத்மா! இந்தச் செய்தி எப்படிப் புறப்பட்டது என்று இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரே சமயத்தில் அத்தனை சாதனங்களிலும் ஒரே வார்த்தை அமைப்பில் தோன்றுவது... மனித சாத்தியமில்லை.''

''அப்படியென்றால் நீயும் இது கடவுள் அனுப்பிய செய்தி என்கிறாயா? உனக்கும் ஜுரம் வந்துவிட்டதா ?''

''வேறு ஒரு காரணமும் கண்டுபிடிக்க முடியவில்லை.''

''சரிதான் ! என்னய்யா செய்தி ஸ்தாபனம் நடத்துகிறீர்கள்..... இந்தப்....''

''ஒரே ஒரு கேள்வி'' என்று மேஜையின் ஓரத்திலிருந்து குரல் வந்தது. இளம் டாக்டர் க்ராஸ்மன்.... மனோதத்துவப் பாஸை...

''என்ன?''

''ஆத்மா, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், இதைப் பற்றி ?''

''சத்தியமாக இது ஒரு விஷமம் ! யாரோ கிளப்பிவிட்ட புரளி..... திட்டமிட்டுச் செய்யப்பட்ட கேலி !''

''எதற்காக அப்படி ஒருவர் செய்ய வேண்டும் ?''

''எதற்காக ? நீயே பார்க்கிறாயே! உலகத்தின் இன்றைய மன நிலையை. எல்லாரும் இதைப் பற்றியே பேசுகிறார்கள். எங்கே போனாலும் கடவுள் வருகையைப் பற்றித்தான் பேச்சு... இது நிஜமா.... ? பொய்யா ? நீ நம்புகிறாயா? நம்பிக்கை இல்லையா ? பந்தயங்கள், பேச்சுக்கள்....... பொதுக் கூட்டாளிகள்.... ஒருத்தன் கிருஷ்ணன் என்கிறான். ஒருத்தன் ராமன் என்கிறான். ஒருத்தன் யேசு என்கிறான். வைணவா என்கிறான். ராம் என்கிறான். சென்ற நூற்றாண்டுடன் இந்தக் கேலிக்கூத்தெல்லாம் முடிந்துவிட்டது என்று நினைத்தோம். கடவுளுக்கே அர்த்தமில்லாமல் செய்திருந்தோம். அவசியமில்லாமல் செய்திருந்தோம். மறுபடியும் அடியைப் பிடிடா என்று ஆரம்பமாகிவிட்டது. இந்தச் செய்தியின் மூலத்தை நாம் கண்டு பிடித்தே ஆக வேண்டும்.... உலகத்தில் கலகம் ஏற்படுத்த அமைதியைக் குலைக்க ஒரு சதி இது......''

''ஆத்மா ! கோபிக்காமல் இருந்தால் ஒன்று சொல்ல விரும்புகிறேன்.''

''நான் கோபித்து என்ன பிரயோசனம்? வேலை நடக்க வில்லையே ! காரணம் இன்னும் தெரியவில்லையே! சொல்லு. கோபிக்கமாட்டேன்.''

டாக்டர் பரஞ்சோதி தன் வியர்வையைத் துடைத்துக் கொண்டு..... சட்டையைத் தளர்த்திக் கொண்டு ஒரு விழுங்கு தண்ணீர் எடுத்துக் கொண்டு....

''ஒரே ஒரு வகையில் இந்தச் செய்தி வெளி வருவது சாத்தியம். ஒரே ஒரு ஆசாமியால்தான் அது முடியும் !''

''யார் அது சொல்லு ? உடனே அவனைக் கைது செய்து கொண்டு வா? விளக்கடியில் போட்டு வாட்டி எடுத்துவிடலாம்.... யார்? அது. யார் ?''

''நீங்கள்தான் ஆத்மா !''

''நானா !'' நிதானமாகச் சிரித்தார். ''என்னய்யா, நீ உம்மாதிரி ஒரு முட்டாளையா உலகப் போலீஸ் தலைவனாக வைத்திருக்கிறார்கள்?''

''ஆத்மா ! டாக்டர் பரஞ்சோதி சொல்வதை முழுவதும் கேட்கலாம் எனத் தோன்றுகிறது '' என்றார் க்ராஸ்மேன்.

''சொல்லு. சொல்லு !'' என்று கைக்குட்டையால் சிரிப்புக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சாய்ந்து கொண்டார் ஆத்மா.




''ஆத்மா, ஞாபகம் இருக்கிறதா? Flash! மற்றவர்கள் எவருக்கும் தெரியாது. உங்களுக்கும் தலைவருக்கும் எங்கள் டிபார்ட்மெண்டுக்கும்தான் தெரியும்.''

ஆத்மாவின் சிரிப்பு நின்றது.

மற்றவர்கள் மௌனமானார்கள். ஏர்கண்டிஷனரின் உறுமல் மட்டும் கேட்டது.

''மூன்று வருஷங்களுக்குமுன் இந்த ஃப்ளாஷ் சாதனத்தை அமைத்தோம்.... அதைப் பற்றி இப்போது மற்றவர்களும் தெரிந்து கொள்ள வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது என நினைக்கிறேன்... சொல்லலாமா ஆத்மா? சொல்ல அனுமதி இருக்கிறதா ?''

''சொல்லு!'' என்றார் சிந்தனையின் ஊடே.

உலக அரசின் புதிய திட்டம் ஃப்ளாஷ். உலகின் பத்திரத்தைப் பாதிக்கக்கூடிய மகத்தான, மிகத் தீவிரமான அபாயம் நேர்ந்தால் உலகின் அத்தனை செய்திச் சாதனங்களையும் ஒரே சமயத்தில் கவர்ந்து ஒரே செய்தியை அனுப்ப ஏற்படுத்திய ஒரே ஒரு சாதனம். எலெக்ட்ரானிக்ஸ் நிபுணர்களின் மூன்று வருஷ உழைப்பிற்குப் பின் ஏற்படுத்திய ஒரு சூப்பர்

சாதனம்! அது ஆத்மாவின் அலுவலகத்தில் ஒரு தனி அறையில் இரட்டைப் பூட்டுப் போட்டிருக்கிறது.

'' அதன் சாவி எங்கே இருக்கிறது?''

'' அதற்கு ஒரு சாவி இல்லை! இரண்டு பூட்டுகள்; அதுவும் நம்பர் அமைக்கும் காம்பினேஷன் பூட்டுகள். ஒரு காம்பினேஷன் ஆத்மாவுக்குத் தெரியும்..... மற்றது?'' என்று ஆத்மாவைப் பார்த்தார்.

''மற்றது உலகத் தலைவருக்குத் தெரியும்!''

மறுபடியும் மௌனம். எல்லாரும் ஆத்மா பேசக் காத்திருந்தார்கள்.

ஆத்மா புன்முறுவலுடன், ''பரஞ்சோதி! ம்ஹூம்!'' என்றார்.

''பரஞ்சோதி சொல்வது உண்மைதான். அப்படி ஒரு சாதனம் இருக்கிறது. இதைத் தலைவரோ நாமோ தனியாகத் திறக்க முடியாது. அவர் நம்பர் எனக்குத் தெரியாது. என் நம்பர் அவருக்குத் தெரியாது. இருவரும் சேர்ந்து சதி செய்திருக்கிறோம் என்று பரஞ்சோதி சொல்ல முற்படுகிறார் என்றால் அதையும் விசாரித்துப் பார்த்துவிடலாம்... தலைவர் இப்போது இங்கே இல்லை. நோவாவில் இருக்கிறார்..... இன்றுதான் இந்தக் கலாட்டாவைக் கவனிக்கப் புறப்படுகிறார்... அவரைப் பார்த்துப் பதினைந்து நாட்களாகிவிட்டன. செய்தி வந்தது நேற்று முன்தினம். அதற்கு மேலும் சந்தேகம் இருந்தால்...''

''சந்தேகத்துக்குச் சொல்லவில்லை, ஆத்மா! நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொண்டுவிட்டீர்கள்..... இந்தச் செய்தி தோன்றுவதற்கு இருக்கும் ஒரே ஒரு மார்க்கத்தைச் சொல்வது இந்தத் தருணத்தில் என் கடமையாகிறது.....''

'' இருந்தும் எங்கள் மேல் சந்தேகத்தை விதைத்துவிட்டாய்! அந்த முட்டாள் பெட்டியை ஆரம்பப் பரிசோதனைகளுக்கு அப்புறம் பார்த்ததுகூட இல்லை நான்....எதற்கும் பார்த்துவிடலாம்....''

'' பார்க்க வேண்டிய அவசியமில்லை! நீங்கள் அதை உபயோகிக்கவில்லை என்று சொன்னால் அந்த வார்த்தை போதும்!''

'' போதாது!..... பார்த்து விடலாம், வாய்யா!''

அவர்கள் ஃப்ளாஷ் சாதனம் அமைத்திருந்த அந்த அறை வாசலில் நின்றார்கள். நிபுணர்கள் அதன் இரண்டு பூட்டுக்களைப் பரிசோதித்தார்கள். பௌடர் அடித்து விரல் ரேகைகளைத் தேடினார்கள்...இன்ஃப்ரா ரெட் போட்டுப் பார்த்தார்கள். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தார்கள்...

''ம்ஹூம், நிச்சயமாகச் சொல்லலாம், இது திறக்கப்படவில்லை என்று!''

''க்ராஸ்மன், என்ன செய்ய வேண்டும், சொல்லு! மனோதத்துவ நிபுணராயிற்றே நீ!''

''உடனே அரசாங்கச் சார்பில் ஓர் அறிக்கை விட வேண்டும். மக்கள் மிகவும் குழப்பமான நிலையில் இருக்கிறார்கள். எல்லாரும் இதையே பேசுகிறார்கள்..... உற்பத்தி குறைந்துவிட்டது... உலகின் மன நிலையே பாதிக்கப்பட்டு விட்டது. செய்தி எப்படிக் கிளம்பியது என நம்மால் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும்...செய்திதவறானது...வெறும் புரளி' என்று அறிக்கை விட வேண்டும்...!''

''ஒரே ஒரு சந்தேகம்!'' என்றொரு வயதான குரல் கேட்டது. ''என்னய்யா?''

''செய்தி புரளி, ஆதாரமற்றது என்று நாம் முழுமையாகத் தீர்மானித்து விட்டோமா?''

''ஏன், அதில் என்ன சந்தேகம்! நீ என்ன சொல்லப் போகிறாய்? கடவுள் வரப் போகிறார் என்றா?''

''இன்னும் பன்னிரண்டு தினங்கள்தானே, பார்த்து விடலாமே!''

''சரிதான், நீகூட மாறிவிட்டாயா? பார்த்தாயா? செய்தி எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறது! பெரியவரே! நீர் கடவுள் இருக்கிறார் என்று நம்புகிறீரா?''

''இருக்கலாம்.''

''கடவுள் இருந்தால் இப்படி முட்டாள்தனமாகப் பேப்பரில் போட்டுக் கொண்டு, டெலிவிஷனிலே அறிவித்துவிட்டு, ஒரு சினிமா நடிகனைப் போல் இன்ன தேதி, இன்ன நேரம் என்று அறிவித்துவிட்டு வருவாரா? இதென்ன அவதாரமா? அதுவும் திடீரென்று நம் மேல் அவருக்கு அவ்வளவு கருணை... அவதாரம் எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம்! நாம் என்ன பாவம் செய்துவிட்டோமா? நாம் என்ன கொலைகள் செய்துவிட்டோமா? எவ்வளவு சந்தோஷமாக நிம்மதியாக இருக்கிறோம்! கடவுளுக்கு என்ன அவசியம்?''

விஞ்ஞானப் பிரிவைச் சேர்ந்த எலய்டோ என்பவர் பேசினார். ''எனக்கு ஒரு விஷயம் முக்கியமானதாகப் படுகிறது.''

''என்ன?''

''அந்தத் தினம்! வெள்ளிக்கிழமை.''

''அதனால் என்ன?''

''அன்று உலக பையாலஜி கேந்திரத்தில் ஒரு முக்கிய பரிசோதனை நடக்க இருக்கிறது....''

''என்ன?''

''முதன் முதலாக முழுவதும் ரசாயன அடிப்படையிலேயே மனிதக் கருவை உண்டாக்கப் போகிறார்கள்!''

'' உண்டாக்கட்டும்! இதற்கும் கடவுளுக்கும் என்ன சம்பந்தம்?....''

'' முதல் தடவை கடவுள் அமைத்த சிருஷ்டி நியதியை மீறப் போகிறோம்'' என்றார் பெரியவர்.

''கடவுளாவது அமைத்ததாவது.... என்னய்யா, அபத்தம் இது! சென்ற நூற்றாண்டின் இறுதியிலேயே இந்த விவாதங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுக் காரண காரியங்களுக்கு எல்லாம் ஆதாரங்களை அலசித் தீர்வு கண்டுவிட்டோம். எகிப்திய ராவிலிருந்து கிரேக்கக் கடவுள்களை, ஸெண் தாமஸ் அக்வினாஸ், யூதர்களின் ஜெஹோவின், யங்கின் மனத் தத்துவ அடிப்படை விசாரணைகளை, இந்துக்களின் வேத புராணங்களை, பௌத்தத்தை, ஜைனத்தை, இஸ்லாமை, தாவிஸத்தை எல்லாவற்றையும் அலசியாகிவிட்டது. கடவுள் என்பது மனிதனின் மன அமைதிக்கு ஏற்படுத்திக் கொண்ட சித்தாந்தம். அந்த அமைதியை அளித்து விட்டால் கடவுள் என்கிற சித்தாந்தத்துக்கு அர்த்தமும் இல்லை; அவசியமும் இல்லை என்று ஆணித்தரமாக நிரூபித்து விட்டோம். எல்லாவற்றையும் ஒழித்துக்கட்டி விட்டோம்! பள்ளிப் பாடங்களிலிருந்து கடவுளை நீக்கிவிட்டோம்! பரிசுத்த ஆவிகளையும், தந்தைகளையும் மகன்களையும்

அடடே! மாசக் கடைசிலே கூட, உன் கையிலே நெஜமாவே பணம் இருக்கா, என்ன?

ஆமாம்; அது மட்டுமில்லே, ஸ்டேட் பாங்கிலே நான் ஒரு ரிக்கரிங் டெபாஸிட் கணக்கு கூட ஆரம்பிச்சிருக்கேன். அதுனுலே ஒவ்வொரு மாசமும் கொஞ்சம் சேமிக்க முடியும்!

# ஸ்டேட் பாங்க் ரிக்கரிங் டெபாஸிட் திட்டம்

## மாதந்தோறும் சேமிக்கும் பழக்கம்—நாளை நலன் தரும்

ஒவ்வொரு மாதமும் எத்தனை சேமிக்க வேண்டும், மற்றும் எத்தனை காலம் சேமிக்க முடியும் என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள். ஆரம்பித்த வுடன், உங்கள் சேமிப்பு வட்டியுடன் வளரும் வேகத்தைக் கண்டு மலைத்துப் போவீர்கள்.

இன்னும் எளிதாக்க வேண்டுமானால், ஸ்டேட் பாங்கில் ஒரு சேமிப்புக் கணக்கு ஆரம்பியுங்கள். மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை உங்கள் ரிக்கரிங் டெபாஸிட் கணக்கில் மாற்றும்படி உங்கள் ஸ்டேட் பாங்க் கிளைக்குக் கூறிவிடவும்.

வசதியான காலவரையறைக்கு, ரூ. 5/-ன் மடங்கில் நீங்கள் சேமிக்கலாம். வட்டி விகிதம் ஆண்டொன்றுக்கு வருமாறு: 12 மற்றும் 24 மாதங்களுக்கு 8%, 36, 48, மற்றும் 60 மாதங்களுக்கு 9%, 61, 72, 84, 96, 108 மற்றும் 120 மாதங்களுக்கு 10%.

இன்னும் என்ன? நீங்கள் போகுமிடமெல்லாம் உங்கள் பணமும் கூடவே வரும். காரணம், இந்தியாவில் 4000க்கும் மேற்பட்ட வெவ்வேறு இடங்களில் உங்களுக்கு சேவை புரிகிறது ஸ்டேட் பாங்க்.



**ஸ்டேட் பாங்க்**




அதிகமாக மரங்கள் வளருங்கள்

SBI-15-203 TAM

கிருஷ்ணர்களையும் அல்லாக்களையும் ஜூர துஷ்டர்களையும் துப்புரவாக நீக்கிவிட்டோம். எங்கிருந்து கிளம்பியது இந்தக் கரையான்?''

''இருந்தும்!''

''சரிதான்! நண்பர்களே! வோட் எடுத்துப் பார்த்துவிடலாம். நாம் இந்தச் செய்தியை நம்புகிறோமா? 'நம்பவில்லை' என்பவர்கள் கை தூக்குங்கள்!''

அந்தப் பெரியவரையும் தேர்ந்த விஞ்ஞானியான எலெம்டோவையும் தவிர மற்றவர்கள் கை தூக்கினார்கள்.

''மெஜாரிட்டி தீர்ப்பு! பரஞ்சோதி! உடனே மறுப்புச் செய்தி தயார் செய்!''

▪ ▪ ▪

“மறுப்பு விட்டிருக்கிறார்கள். கவனித்தீர்களா?''

''ஏன் உடனே மறுப்புச் செய்தி அறிவிக்கவில்லை? ஏம்ப்பா, இன்னொரு சோமா கொண்டு வா, சாருக்கு!''

''இல்லை, நான் சாப்பிடுவதில்லை.''

''சும்மா சாப்பிடுங்கள்! தேவர்களின் பானம்போல் சோமா!''

''நீங்கள் நம்புகிறீர்களா?''

''கட்டாயம்! நிச்சயம் வெள்ளிக்கிழமை வரப் போகிறார்.''

''எனக்கு அரசாங்கம் சொல்வது போல் இது ஒரு ஜோக் என்றுதான் படுகிறது!''

''சிரிக்கப் போவது நாங்கள்.''

''கடவுள் எப்படி இருப்பார்?''

''பார்க்கப் போகிறோமே!''

'நான் சொல்கிறேன்' என்று அருகில் இருந்த ஒருவர் எழுந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டார்!

''நீங்கள் எந்தக் கட்சி?''

''கட்டாயம் வரப் போகிறார்!''

''நண்பரே! கேட்டீரா? சபாஷ்!''

''ஸார் என்ன சொல்கிறார்? கடவுள் எப்படி இருப்பார் என்று....!''

''கீதை என்று ஒரு புத்தகம் இருக்கிறது. அரசாங்கம் தடை செய்த புத்தகம். (குரலைத் தாழ்த்தி) அதன் கையெழுத்துப் பிரதி ஒன்று என்னிடம் இருக்கிறது. என்ன அபாரமான பாடல்கள் தெரியுமா?''

''என்ன சொல்கிறது?''

''அது கடவுளே சொன்ன பாடல்கள்!''

''கடவுள் பெயர் என்ன?''

''கிருஷ்ணர்! அவர்தான் கடவுள்..... கீதையில் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். யுகத்துக்கு யுகம் நான் தோன்றுவேன் என்று.''

''நல்ல காமிராவாக ஒன்று வாங்கிக் கொள்ள வேண்டும். ஸார், உங்கள் பெயர் என்ன? கிருஷ்ணனா?''

''கிருஷ்ணன் என்றே கூப்பிடுங்களேன்.''

''உங்களுக்குச் சரித்திரம் தெரியுமா? கிருஷ்ணன், ராமன் என்பதெல்லாம் பிற்பட்ட கடவுள்கள். ஹிந்துக்கள் முதலில் சூரியனையும், இந்திரனையும், வருணனையும் உபாசித்தார்கள். தெரியுமா?....''

''கிருஷ்ணன்தான் எல்லாம். இந்திரன், வருணன், சிவன், விஷ்ணு, நீ, நான், அந்த ஸ்டீரியோவிஷன் பெட்டி — எல்லாம் கிருஷ்ணன்தான். கீதையிலே சொல்லியிருக்கிறார்!''

''எக்ஸ்க்யூஸ் மீ! டெய்லி உங்களுக்கு ஒரு ரூபாய் மணியார்டர் வருகிறதே! யார் எதற்கு அனுப்புகிறார்கள்?''

''அடிக்கடி என் பர்ஸைத் தொலைத்து விடுகிறேன் என்பதற்காக என் மனைவி ஜனதா சாப்பாட்டுக்கு அனுப்புகிறாள்!''



“இரண்டு மூன்று நாட்களாகச் சரியாகவே சாப்பிடுவதில்லை, நீங்கள்.''

''அதிக எதிர்பார்ப்பில் எனக்கு உணவு கொள்ளவில்லை......''

''தூக்கத்தில்கூடக் கடவுள் பேத்தலா?''

''இன்னும் பத்து நாட்கள்! இன்னும் பத்து நாட்கள்!''

''எனக்கு என்னவோ சூரியன்தான் கடவுள் எனச் சந்தேகம் ஏற்படுகிறது.''

''போடி, முட்டாளே! விளம்பரத்தைச் சரியாகக் கவனித்தாயா? சூரிய உதயத்தின் போது நான் உங்கள்முன் தோன்றுவேன்.... என்று இருக்கிறதே! அப்படி என்றால் என்ன அர்த்தம்? சூரியனும் அவரும் வேறு என்றுதானே! சூரியன் அவருக்குச் சின்னசமாசாரம். அவர் சூரியனை விட மிக மகத்தானவர்.....''

''நான் அன்றைக்கு என்ன உடுத்திக் கொள்வது என்று யோசிக்கிறேன்!''

''நீ நிர்வாணமாக வந்தாலும் ஒருவரும் உன்னைப் பார்க்கப் போவதில்லை!''

“எங்கேய்யா, அட்வர்டைஸ்மெண்ட் மானேஜர்?''

''உங்களுக்காகத்தான் காத்திருக்கிறார் ஸார்........!''

''கூப்பிடு, அவரை. இன்னும் ஏழு நாட்கள்தான் இருக்கிறது.''

''நமஸ்காரம் ஸார்.''

''என்ன, விளம்பரம் தயாராகிவிட்டதா?''

''பாருங்கள்.''

அட்வர்டைஸ்மெண்ட் மானேஜர் ஏழெட்டுப் போஸ்டர்களை விரித்தார்.

''ம்ஹூம்...ம்ஹூம்...'' என்று அவைகளை ஒவ்வொன்றாக நிராகரித்துவிட்டு... ஒரு போஸ்டரை நிறுத்தி, ''ம்... இதையே அடியுங்கள். மூன்று கோடிப் பிரதிகள் பல வர்ணத்தில்....'' என்றார்.

அந்தப் போஸ்டரில்...

''கடவுள் இருக்கிறாரோ, இல்லையோ..... கோக்கா கோலா இருக்கிறது.''

“ஓஹ... அக்னியே! மர்த்யனான நான் மரணமில்லாத உம்மை ஸ்துதியிலீடுபட்டு மனத்தோடு அழைக்கிறேன். குழந்தைகளுடன் யான் மரணமில்லாமல் உண்ணும்படி அன்னத்தை அளியும்!

''அக்னிதான் கடவுள்! பார்த்துக் கொண்டேயிருங்கள்! கிட்ட நெருங்குமுன்

**கல்லூரி மாணவர்கள் கவனத்துக்கு:**

''தேவன் வருகை'' என்ற இந்தக் கதையுடன் சுஜாதாவின் இந்த விஞ்ஞானக் கதைகள் தொடர் முடிவடைகிறது. ஏற்கெனவே அறிவித்தது போல் இந்த விஞ்ஞானக் கதைகளைப் படித்துள்ள கல்லூரி மாணவர்களை அவை உங்கள் உள்ளங்களில் ஏற்படுத்திய உணர்ச்சிகளை, பாதிப்புகளைப் பற்றிச் சுருக்கமாக எழுதுமாறு கோருகிறோம். பிரசுரமாகும் கட்டுரைகளுக்கு அவரவர் விருப்பப்படி புத்தகப் பரிசோ அல்லது பணமாகவோ அனுப்பி வைக்கிறோம். முடிவு தேதி செப்டம்பர் 30உ.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

ஏற்கப்படாத கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது. உறைமீது விஞ்ஞானக் கதை ஆய்வு என்று குறிப்பிடவும்.

யாதபடி ஓர் அக்னி தோன்றும்! நம் எல்லோரையும் அப்படியே அணைத்துக் கொள்ளும்....''

''நியமிக்கும் படைக்குச் சொல்லியிருப்பார்கள் என்று நினைக்கிறேன்!''

'' உங்களுக்குக் கிண்டலாக இருக்கிறது... இன்னும் மூன்று நாட்களில் தெரிந்து கொள்ளப் போகிறீர்......''

''முட்டாள்தனத்தின் சிகரம்.''

''உங்களுக்கு நம்பிக்கை இல்லை, போதும்!''

''கடவுள் வந்தால் என்ன, வராவிட்டால் என்ன... என் தூக்கம் கெட்டுவிட்டது. பக்கத்து வீட்டில் தினம் பஜனை செய்கிறார்கள்! இதையெல்லாம் அரசாங்கம் அனுமதிக்கிறது.''

''அரசாங்கத்தால் ஒன்றும் செய்ய முடியவில்லை. நிலைமை அளவுக்கு மீறிவிட்டது.''

''ஏன்யா, எத்தனை கடவுள் இருக்கிறார்கள். ஒருத்தன் கிருஷ்ணன், ஒருத்தன் அல்லா, ஒருத்தன் யேசு! நீர் புதுக் கட்சி! அக்னி! எத்தனை பேர் அய்யா தோன்றப் போகிறார்கள்..... அங்கே இடம் இருக்குமா?''

''அக்னிதான் கடவுள்!''

''அது சரி! நம் ஊரிலே எங்கே தோன்றப் போகிறார், மிஸ்டர் அக்னி!''

'' ஊருக்கு வெளியே பெரிய மைதானம் இருக்கிறது. அங்கேதான் எல்லாரும் கூடுகிற அளவு இடம் இருக்கிறது. இப்போதே ஜனங்கள் அமைதியாய்க் கூடித் தரிசிப்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்கிறார்கள். நீங்கள் வருகிறீர்கள், இல்லையா?''

'' நான் வரவே போவதில்லை.''

'' ஏன்?''

'' வீட்டிலே ஸ்டீரியோவிஷனில் நல்ல கலரில் காட்டுவார்கள். கூட்டம் இல்லாமல் பார்க்கலாம். அதிகாலையில் எழுந்து கூட்டத்தில் 'மோதியடித்துக் கொண்டு யார் போவார்கள்?''

''நாசம், நாசம்'' என்றார் ஆத்மா.

'' என்ன செய்வது ஆத்மா! இந்த ஹிஸ்டீரியாவை எதிர்பார்க்கவில்லை....''

'' என்னதான் மறுப்புவிட்டாலும் அந்த முட்டாள் ஜனங்களுக்கு மண்டையில் ஏறவில்லையே?''

''இன்னும் இரண்டு நாட்கள்தானே! பல்லைக் கடித்துக் கொண்டு.... எக்கேடு கெட்டுப் போங்கள் என்று இருக்க வேண்டியதுதான்.''

''கூட்டம் அதிகம் இருக்கும்.''

'' என்ன செய்வது! அதற்கான போலீஸ் பந்தோபஸ்துக்கள் செய்தாக வேண்டும்!''

''தலைவர் என்ன சொல்கிறார்?''

''அவரும் இந்த விளையாட்டு எதில் முடிகிறது என்று பார்த்துவிடலாம் என்கிறார். ஜனங்கள் முண்டியடித்துக்கொண்டு சாகாமல் இருந்தால் சரி..... பரஞ்சோதி, ஒரு முக்கியமான விஷயம்..... கூட்டம் முடிந்தபின்தான் கவனமாக இருக்க வேண்டும்.... கலக மக்கள் கல்லடி எதுவும் ஏற்படக் கூடாது.......''

''பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் வருகிறீர்களா?''

'' நானா!'' என்று சிரித்தார்.

அந்த வெள்ளிக்கிழமை.

மனித மைதானம். சூரியன் இன்னும் உதயமாகவில்லை. மெல்லிய வெளிச்சம் வர ஆரம்பித்திருந்தது. அந்த இடத்தில் இருந்த அத்தனை அத்தனை மனிதர்களின் எண்ணிக்கைக்கு ஆரவாரம் சும்மியாக இருந்தது.

ஓர் எதிர்பார்ப்பு காற்றில் தொங்கியது.

''கிருஷ்ணா! கிருஷ்ணா! மறுபடியும் வா!''

''யேசுவின் இரண்டாவது வருகை!''

''தால்தான் கடவுள்!''

''அல்லா தான் எல்லாம்!''

''ஜாரதுஷ்டிரனை வரவேற்கிறோம்!''

'' அவன் சிவன்!''

— என்று அங்கங்கே அட்டைகளில் ஒட்டிய எழுத்துக்கள் நடனமாடின. பலவித ராகங்களில் பாடல் கிட்டுக்கள் சிறிய சிறிய ஹோமங்கள், பூக்கள், காமிராக்கள்...... ஸ்டீரியோவிஷனின் டாலிக்கள் ஆர்க் விளக்குகள்....விளம்பரங்கள்...

சூரிய உதயம் ஐந்து ஐம்பத்தெட்டுக்கு.....

மணி ஐந்து ஐம்பத்து ஏழு. ஆரவாரம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து அடங்கி.. மௌனம் மிக மிக மௌனம்..... தூரத்தில் மெதுவாகச் சோலையைஅலைக்கும் காற்று கேட்டது..... உறங்கி எழுந்த பட்சிகளின் உற்சாகக் குரல்கள் கேட்டன.... எல்லோரும் எல்லோரும் எதிரே தனியாக அமைக்கப்பட்டிருந்த அந்தக் காலி இடத்தை எதிர்நோக்கி இருந்தார்கள்.....

ஐந்து ஐம்பத்து எட்டு.

**ஆறுமணிக்கு அவர்கள் வீடு திரும்பினார்கள்.**









கம்பன் விழாவில் பேசும் கம்பனடியார்கள் இஸ்மாயில், கண்ணதாசன், கிருஷ்ணசாமிரெட்டியார்.

# கம்பனுக்கு யோகம்

நீதிபதி இஸ்மெயில் தலைமையில் சென்ற ஆண்டுதான் தொடங்கப்பெற்ற சென்னை கம்பன் கழகம் அதற்குள் ஓர் அருமையான காரியத்தைச் சாதித்தது. தமிழ் கூறும் நல்லுலகின் ஏகோபித்த பாராட்டைப் பெற்றுவிட்டது. கம்பராமாயணம் முழுவதையும் ஒரே கையடக்கப் புத்தகமாக மெல்லிய தாளில் அச்சிட்டு இந்த ஆண்டு கம்பர் விழாவில் வெளியிடுவதென்றால் சாதாரண காரியமா அது?

* ஐந்து காண்டங்களின் பன்னீராயிரம் சொச்சம் பாடல்களையும் மிக நேர்த்தியான முறையில் அச்சிட்டு வழங்கியுள்ளனர். அதன் விலை ரூபாய் எழுபத்தைந்து. வெளியிடும் முன் பிரதிகளுக்குப் பதிவு செய்துகொள்வோருக்கு இருபத்தைந்து ரூபாய் சலுகை காட்டி விற்பதாகச் சென்ற ஆண்டு அறிவித்தார்கள். உடனே 1200 பிரதிகளுக்கு முன்பணம் வந்து விட்டது! மூலம் மட்டுமேயுள்ள கம்பர் பாடல் புத்தகத்துக்கு அவ்வளவு மவுசு! தமிழ் மக்கள் ஐம்பது ரூபாய் புத்தகத்தைக் கண்ணால் காணாமலேயே முன்பணம் அனுப்பத் தயாரா யிருக்கிறார்கள்!

இவ்வாண்டு கம்பர் விழாவில் புத்தகத்தை வெளியிட்டவுடன், விழா நடக்கும் இவ்விரண்டு நாட்களிலும் வாங்குபவர்களுக்குப் பதினைந்து ரூபாய் சலுகை அளிப்பதாகச் சொன்னார்கள். அவ்வளவுதான்; புத்தகத்தை அறுபது கொடுத்து வாங்க மக்கள் நீண்ட 'கியூ' நிற்க ஆரம்பித்து விட்டார்கள். அவர்களிடம் காணப்பட்ட பரபரப்பு மெய் சிலிர்க்க வைத்தது. புத்தகம் வெளியான ஒரு மணி நேரத்துக்குள் சுமார் மூந்நூறு பிரதிகள் விற்றுப்போய் விட்டன. அடுத்த நாளும் இதே போல் வேகமாகப் புத்தகங்கள் விற்பனையாயின.

இந்த ஆண்டு கம்பர் விழா ஸ்ரீமதி எம். எஸ். கம்பராமாயணத்திலிருந்து கடவுள் வணக்கம் பாட, நீதிபதி மகராஜன் தொடங்கி வைக்க, நீதிபதி கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமை வகிக்க, கவியரசு கண்ணதாசன்; திரு ஏ. வி. எம். செட்டியார் அவர்களுக்கு முதல் பிரதியை அளித்து வெளியிட விழா தொடங்கியது. இரண்டு நாட்களிலும் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மண்டபம் ஆகியவற்றுடன் பிரமாதமாக நடைபெற்றது. ஆயிரக் கணக்கில் மக்கள் குழுமி அறிஞர்களின் சொற்பெருக்கைக் கேட்டார்கள்.

கம்பருக்காக மணி மண்டபம் தமிழகத் தலைநகரிலேயே எழுப்ப எண்ணம் உள்ளது என்றவுடன் சபையோரிடமிருந்து பத்தாயிரம் ஐயாயிரம், ஆயிரம் என்று வெகு வேகமாகப் பணம் குவிந்ததைக் கண்டபோது, ''கம்பனுக்கு என்ன இப்படி யோகம் அடிக்கிறது!'' என்று பூரிக்காமல் இருக்க முடியவில்லை. இந்தக் காட்சிகளை ரசிகமணி டி. கே. சி.யும் பேராசிரியர் கல்கியும் ராஜாஜியும் காணாமல் போய் விட்டார்களே! என்ற ஏக்கம் மட்டும் எட்டிப் பார்த்தது.

தமிழகத்தில் கம்பன் புகழை, கவி நயத்தைப் பரப்பியவர்கள் ரசிகமணி டி. கே..சி. அவர்கள். 'உண்ணும்போதும் கம்பர் — உறங்கும்போதும் கம்பர்' என்று வாழ்ந்தவர்கள்.

சென்னையில் கம்பர் விழா நடந்து முடிந்த ஒருசில நாட்களில் டி. கே. சி. வாழ்ந்த திருக்குற்றாலத்தில் ரசிகமணி டி. கே. சி.யின் 95வது பிறந்த நாள் விழா நடந்தது. நண்பர்கள் கூடி அவரது இலக்கியப் பணியையும் கலைப் பணியையும் நினைவுகூர்ந்து அஞ்சலி செலுத்தினார்கள். கல்கி அவர்களின் வாழ்க்கை வரலாற்றைப் ''பொன்னியின் புதல்வர்'' என்ற தலைப்பில் எழுதிக் கல்கி வாசகர்களின் இதயங்களில் நிரந்தர இடம் பெற்றுவிட்ட சுந்தா அவர்கள் தலைமை வகித்து நடத்திக் கொடுத்தார்கள். சென்னையிலும் வட்டத் தொட்டி சார்பில் டி. கே. சி. நினைவு நாள் நடைபெற்றது. திரு மகராஜன் தலைமை வகிக்க ஸ்ரீமதி ருக்மிணி தேவி முதலிய அன்பர்கள் ரசிகமணி சம்பந்தப்பட்ட பல சம்பவங்களை நினைவுகூர்ந்தார்கள்.

சென்னை கம்பர் கழகத்தார் கம்ப ராமாயண வகுப்புக்கள் நடத்தத் திட்டமிட்டிருப்பதாக அறிவித்துள்ளனர். வெறும் பதவுரை, பொழிப்புரை, இலக்கணக் குறிப்புக்கள் தெரிவிக்கும் வித்வான் வகுப்புக்களாக அமையாமல், கம்பன் கவி நயம் புலப்படுத்தும் கலை வகுப்புகளாக அமையும் என்று நம்புகிறோம்.

எஸ். வி. எஸ்.

* கிடைக்குமிடம்: கம்பன் கழகம்,
795, அண்ணா நகர். சென்னை-600040.

# உயர்ந்த தரம், மலிவான விலை

# ஹெலனா

## விஸ்கோஸ் இணைந்த சானிடரி டவல்கள்




விஸ்கோஸ் இணைந்த சானிடரி டவலான ஹெலனா உபயோகித்து சுதந்தர உணர்வையும், பாதுகாப்பையும் அனுபவியுங்கள். வேலை, விளையாட்டு, விருந்தினரை உபசரிப்பது அல்லது ஓய்வு, எந்த நேரமானாலும் சரி, ஹெலனா அளிக்கும் பட்டுப் போன்ற மிருதுவான மென்மையையும், பாதுகாப்பையும் நீங்கள் நிச்சயமாக நம்பலாம்.

ஈரத்தை ஊடுருவ விடாது தடுக்கும் ஒரு விசேஷ இளஞ்சிவப்பு வண்ணப் பரப்பையுடையது ஹெலனா. உங்களுக்கு ஒரு பரிபூர்ணப் பாதுகாப்பு! விலையும் கச்சிதமானது!

ஒவ்வொரு பெண்ணுக்கும் உற்ற தோழி: ஹெலனா சானிடரி டவல்கள். எல்லா கடைகளிலும் கிடைக்கும்.

**பூரண விநியோகஸ்தர்கள் :**
**பாரி அண்ட் கோ லிட்.,**
**த. பெ. எண். 12 சென்னை-600001**

# மூல நோய்க்கு மூல காரணம்

## குட்மார்னிங் டாக்டர்!

சின்னியப்பன் — நாற்பது வயது — ஒரு தொழிற்சாலையில் 'லேத்'தில் வேலை செய்பவர். நாள்தோறும் பல மணி நேரம் தொடர்ந்து நின்றுகொண்டே பணியாற்ற வேண்டும். அவர் சொன்னார்: "காலையில் பொழுது விடிகிறதே என்று இருக்கிறது. டாக்டர்! காலைக் கடனை முடிக்க நான் படும் வேதனை சொல்லி முடியாது."

"கழிவுப் பொருள் வெளிப்படு முன் இரத்தம் வருகிறதா?"

"ஆமாம். சொட்டுச் சொட்டாக இரத்தம் தான் வருகிறது?"

"எத்தனை நாளாக இப்படி இருக்கிறது?"

"மூன்று மாதங்களுக்கு மேல் இருக்கும். பத்து நாட்களாக இரத்தம் வெளிப்படுவது அதிகமாக இருக்கிறது. இந்த மூன்று மாதங்களுக்குள் வெகுவாகக் குறைந்து விட்டது. மிகவும் ஓய்ச்சலாக இருக்கிறது, டாக்டர்!"

"ஓய்ச்சலுக்குக் காரணம் இரத்தம் வெளியேறுவதுதான். அதை நிறுத்திவிட்டால் களைப்பு இராது. உங்களுக்கு மலச் சிக்கல் இருக்கிறதா?"

"இல்லை. ஆனால், நான் இதற்கு முன்பு அமீபிக் சீதபேதியால் மிகவும் தொல்லைப் பட்டிருக்கிறேன்."

"உங்கள் மூலநோய்க்குக் காரணம் சீதபேதிதான்!" என்று கூறிவிட்டுக் கையுறை அணிந்து அவரது ஆசன வாய்க்குள் விரலை நுழைத்துச் சோதனை செய்து பார்த்தேன். பிறகு 'ப்ராக்டோஸ்கோப்' என்ற கருவியினால் சோதனை செய்து அது மூலம் என்பதை உறுதி செய்து கொண்டேன்.

"மூலம் என்றால் என்ன?"

"ஆசன வாய்க்கு அருகே மியூகஸ் மெம்ப்ரேனுடன் ரத்தக் குழாய்கள் சேர்ந்துள்ள பகுதி. மின்சாரப் பல்ப் மாதிரி மேலே குறுகியிருக்கும். இந்த மூலப் பகுதியில் இரத்தக் குழாய்கள் வெடித்து இரத்தம் வெளிப்படும். நோய் முற்றிய நிலையில் இந்த மூலப் பகுதி மலம் கழிக்கும்போது ஆசன வாய்க்கு வெளியே வந்து விடும். வெளியே வராமல் உள்ளேயே இருந்து தொந்தரவு கொடுத்தால் அதனை (Internal piles) என்கிறோம்."

"இதற்குச் சிகிச்சை என்ன?"

"மூலத்தின் குறுகிய பகுதியில் ரப்பர் பாண்ட் (Rubber band) போட்டு இறுக்கி அந்தப் பகுதிக்கு இரத்தம் வராமல் தடுக்கலாம். மூலம் சுருங்கி, நாளடைவில் நைந்து இற்று விழுந்துவிடும். ஆரம்ப நிலையில் உள்ள நோய்க்குச் சாதாரண மருந்து, இஞ்செக்ஷன் போதும். வயிற்றுப் போக்கு, சீதபேதி நோய்கள் காரணமாக மூல நோய் கண்டால் வயிற்றுப் போக்கு, சீதபேதிக்கு மருந்து கொடுத்துக் குணப்படுத்தினால் மூலமும் மறைந்துவிடும். மலச் சிக்கல் காரணமாக வந்தாலும் துவக்க நிலையில் மருந்தினால் குணப்படுத்திவிடலாம். முற்றிய நிலையில், மூலமே ஆசன வாய்க்கு வெளியே வந்து விடுவதுண்டு. அந்நிலையில் அறுவைச் சிகிச்சைதான் பயனளிக்கும். கிரையோ சர்ஜரி எனப்படும் சிகிச்சை முறையினால், உபத்திரவம் கொடுக்கும் மூலத்தை (—) 18 டிகிரி சென்டிகிரேட் குளிரில் சுருங்கச் செய்து களைந்து விடலாம். நோயின் தன்மையைப் பொறுத்தது சிகிச்சை."

"மூலநோய் வராமல் தடுக்க என்ன வழி?"

"கீரைகள், பச்சைக் காய்கறிகள், உணவில் நிறைய இடம்பெற வேண்டும். இரவில் கொஞ்சம் பால் அருந்துவது நல்லது. பழங்கள் குறிப்பாக வாழை, மிகவும் சிறந்தது. சிறு குழந்தைகளுக்கு மலச் சிக்கல் வந்தால் மலமிளக்கி (Laxative) எதுவும் கொடுப்பது கூடாது. இதன் விளைவாக வைட்டமின் பற்றாக்குறை ஏற்படலாம். காலையில் மலம் கழிக்கு முன் சற்று நடப்பது நல்லது. அவசரப்படவும் கூடாது. மிகுதியாக மதுபானம் செய்வது மூல நோய் வர வழி வகுக்கும். காலைக் கடனை முடிக்கும்போது சுருட்டு, சிகரெட் பிடித்தால் சுலபமாகக் கழிவுப் பொருளை வெளியேற்றலாம் என்று பலர் தவறாக எண்ணுகின்றனர். புகை பிடிப்பது விரும்பத்தக்கதன்று. தவிர்க்கப்பட வேண்டும்."

"ஒரு முறை அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால் மீண்டும் மூல நோய் வரவே வராதா?"

"அநேகமாக வராது. 99 சதவிகிதம் வராது என்று கூறலாம். ஆனால் ஆசனவாய்ப் பகுதியில் வேறு இடத்தில் வந்தால் உரிய சிகிச்சை பெற வேண்டும். இன்னொன்று முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். வெளிக்குச் செல்லும்போது இரத்தம் வெளிப்பட்டால் தாமதியாமல் மருத்துவரிடம் காட்டி ஆலோசனை பெற வேண்டும். மூலத்தினால் உயிருக்கு ஆபத்து இல்லை. ஆனால் இரத்தம் வெளிப்படுவது மூலத்தினால்தானா என்பதை உறுதி செய்து கொள்வதில் தாமதம் கூடாது. சிலருக்கு ஆசனவாய்ப் பகுதியில் புற்று நோய் ஏற்பட்டு அதன் காரணமாகவும் இரத்தம் வெளிப்படலாம். ஆகவே இந்த எச்சரிக்கை அவசியமாகிறது."

சர்ஜன் என். ரங்கபாஷ்யம் கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.



# சிலம்புச் செல்வம்

## ம.பொ.சி



கண்ணகியின் இல் வாழ்க்கை தொடங்குவதைக் கூறும் "மனையறம் படுத்த காதை"யை அடுத்து மாதவியின் நடன அரங்கேற்றக் காதையை அமைத்துள்ளார் இளங்கோ.

சிலப்பதிகாரக் கதையிலே மாதவியைப் பெற்ற தாயின் பெயர் இன்னதெனக் கூறப்படவில்லை. அவள் காப்பியத்தில் நடமாடும் பாத்திரமே அல்லள். அவளுடைய குரலையே கேட்க முடியவில்லை. அந்த அளவுக்கு மாதவியைப் பெற்றவளை 'இருட்டடிப்பு'ச் செய்து விட்டார் இளங்கோ.

சாத்தனார் படைத்த மணிமேகலைக் காப்பியத்திலேதான் மாதவியின் தாய் "சித்ராபதி" என்று கூறப்படுகிறாள். மணிமேகலையில் சித்திராபதிதான் "வில்லன்" பாத்திரம்! பெண் பாலானதால், "வில்லன்" என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள்!

பாட்டியாகிவிட்ட நிலையிலேயே பேத்தியாகிய மணிமேகலையைச் சித்திராபதி படுத்தும் பாட்டை மணிமேகலையில் பார்க்கிறோம். ஒழுக்கக்கேட்டின் சிகரத்திலிருந்து காட்சி அளிக்கிறாள் சித்திராபதி.

அப்படிப்பட்டவளைச் சிலம்பிலே நடமாட விட்டிருந்தால் — மாதவியின் மீது செல்வாக்கு செலுத்த சித்திராபதியை அனுமதித்திருந்தால் — இன்று நாம் காணும் ஒழுக்கத்தில் சிறந்த மாதவியை இளங்கோ படைத்திருக்க முடியாது. அதனால்தான் மாதவியின் தாயைத் திரையிட்டே மறைத்துவிட்டார் சேர முனி இளங்கோ. மாதவியை அறிமுகப்படுத்த வேண்டும் என்பதற்காக இந்திரலோகத்து ஊர்வசியின் கதை சிலம்பிலே சொல்லப்படுகிறது.

முத்தமிழ் முனிவரான அகத்தியர் ஒரு சமயம் இந்திர லோகத்துக்குச் சென்றார். அகத்தியர் நடனக் கலையை ரசிப்பார் என்று கருதி, ஊர்வசியை அழைத்து, "நடனம் நிகழ்த்து" என்றான் இந்திரன்.

நடன அரங்கின் எதிரே முன் வரிசையில் தேவேந்திரன் மகன் சயந்தன் என்பான் அமர்ந்திருந்தான். நடனம் நடந்து கொண்டிருந்தபோது, சயந்தன் ஊர்வசியைக் காமக் குறிப்புடன் நோக்கினான். ஊர்வசியும் பதிலுக்கு மோகப் பார்வையுடன் அவனை நோக்கினாள். அவ்வளவுதான்! அவளது நடனத்திலே தாளம் தவறியது! "வீணையும் பிற இசைக் கருவிகளும் மங்கலம் இழந்தன" என்கிறார் இளங்கோ. இதைக் கண்ட அகத்திய முனிவர் ஆற்றொணாச் சினங்கொண்டார். கலையை இழிவுபடுத்திய சயந்தனையும் ஊர்வசியையும் சபித்தார்! சயந்தனைப் பார்த்து, "நீ இந்திய நாட்டின் நடு விடத்தில் உள்ள விந்திய மலையில் மூங்கிலாகப் பிறப்பாயாக" — என்கிறார்.

ஊர்வசியைப் பார்த்து, "நீ, தமிழ் நாட்டிலே நடனமாடும் மங்கையாகப் பிறப்பாயாக" என்றார்.

"பரதம்" என்று சொல்லப்படும் நடனக் கலையானது முதலில் தமிழகத்தில்தான் தோன்றியது — தமிழின் ஒரு கூறாகவே வளர்ந்தது — முத்தமிழ் முனிவரான அகத்தியர் இட்ட சாபத்தால் விண்ணகத்திலிருந்து வந்தது — என்பது இந்தக் கதையாலும் உறுதிப் படுகிறது.

மண்ணகத்தில் பிறந்த ஊர்வசி, "மாதவி" என்று பெயர் பெற்றாள். அந்த ஆதி மாதவியின் வழியில் தோன்றியவள் சிலப்பதிகார மாதவி. ஊர்வசியின் வழி வந்த மாதவியைக் காதலிப்பதற்கென்று இந்திரன் மகன் சயந்தனின் வாரிசாகக் கோவலன் தோன்றுகிறான்.

இனி, மாதவியின் நாட்டிய அரங்கேற்றத்தைக் காண்போம்.

பூர்வ மாதவியின் வழியில் வந்த பூம்புகார் மாதவிக்கு, ஐந்து வயது முடிந்தபோது நாட்டிக்கலையைப் பயிற்றுவிக்கத் தொடங்கி, ஏழாண்டு பயிற்றுவித்த பின்னர், சோழ மன்னன் அவையிலே அரங்கேற்றம் நிகழ்ந்ததாம். அப்போது அவளுக்கு வயது பன்னிரண்டு.

ஆடலாசிரியனும் இசையாசிரியனும் ஆடவும் பாடவும் கற்பித்தார்களாம். அத்துடனன்றி, நன்னூல் புலவன் ஒருவனைத் தேர்ந்தெடுத்து, அவனிடம் தமிழ் இலக்கண—இலக்கியங்களையும் மாதவி பயின்றாள் என்கிறார். அந்நன்னூல் புலவனின் தகுதியைக் கூறுமிடத்து,

"இமிழ்கடல் வரைப்பில் தமிழகம் அறிய
தமிழ்முழு தறிந்த தன்மையன்...."

என்கிறார். தமிழை முறையாகவும், முழுசாகவும் பயின்ற நன்னூல் புலவனிடம் இலக்கணமும் இலக்கியமும் பயின்றாள் மாதவி.

இந்நாளிலே, ஆடல் — பாடல் பயில்வோர், தமிழ் இலக்கண — இலக்கியங்களைப் பயில்வதில்லை. அதிலே, அற்ப சொற்ப ஞானம் இல்லாதவர்களும் அரங்கேறி ஆடவும் பாடவும் தொடங்கி விடுகிறார்கள். ஆடல் — பாடல் கலை சாத்திரம் என்றால், அதனுடைய வாழ்வையும் வளர்ச்சியையும் கூறும் சரித்திரம் தமிழ் இலக்கியம். ஒரு சாத்திரத்தைப் பயில்வோர் அதன் சரித்திரத்தையும் பயின்றிருக்க வேண்டும்.

மாதவி ஆடலும் பாடலும் அழகும் ஒன்று குறைபடாமல் பெற்றிருந்தாள் என்கிறார் இளங்கோ. "ஒன்று குறைபடாமல்" என்பதால், "குறையவும் கூடாது" என்ற குறிப்பையும் ஆசிரியர் தருகிறார். ஆடலும் பாடலும் தெரிந்திருந்தால் போதுமா? அழகும் வேண்டுமல்லவா? இவ்வளவும் பெற்றுப் பன்னிரண்டு வயதும் முடிந்திருந்த நிலையில் சோழ மன்னன் அவையிலே மாதவியின் நடன அரங்கேற்றம் நிகழ்கின்றது. (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

# புதுமையின் பொலிவுக்கு

# ஹமாம்




நறுமணம் சிந்தும் ஹமாம்...
உங்களுக்கும் உங்கள் குடும்ப
முழுமைக்கும் புதுமைப் பொலிவு
வழங்கிடுமாம்...உள்ளத்தில்
குதூகலம் பொங்கிடச் செய்திடுமாம்.

## ஹமாம்

அதிக நாள் நீடித்துழைக்கும்
டாய்லெட் சோப்.

டாம்கோ தயாரிப்பு—
வாங்க நல்லது
விலை குறைந்தது...
வேலையோ சிறந்தது.
தி டாடா ஆயில் மில்ஸ் கம். லிட்.

CMTH-15-R 172 TM

RFGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு